SHIVAJI

# சிவாஜி

TAMIL WEEKLY

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
28th year
of Publication
*
20—10—1963

அரசியல், தொழில் வள, சமுதாய நல, கலை, இலக்கிய வார இதழ் ◆ ஆசிரியர்: திருலோகசீதாராம்

# பாரதப் பாராளுமன்றம்

## பத்து ஆண்டுகளில் அதன் வளர்ச்சி ஜனநாயகத்துக்கே ஒரு பெருமை. பல நாடுகளில் ஜனநாயகம் அழிந்து வரும்போது பாரதம் கண்ட வெற்றி.

★

சுமார் பத்து ஆண்டுகளுக்கு மேலாக இயங்கி வருகிற நமது பார்லிமெண்ட் உலக ஜனநாயக ஏற்பாடுகளிலேயே பெரியது. பல நாடுகளில் ஜனநாயக சர்க்கார் சரிந்து விழுந்து கொண்டிருக்கும் போது நமது ஜனநாயக அமைப்பு பெருமையும், பேராற்றலும் பெற்று வளர்ந்து வருவது மகத்தான சாதனையாகும்.

நாம் பார்லிமெண்டரி ஜனநாயக முறையைத் தெரிந்தெடுத்திருக்கிறோம். அதில் பார்லிமெண்ட், மக்களின் உரிமைகளைக் காத்து வருகிற மிகப் பெரிய ஸ்தாபனமாக விளங்கி வருகிறது. ஆனால், பிரிட்டிஷ் பார்லிமெண்டைப் போல நமது பார்லிமெண்ட் எல்லா விஷயங்களையும் நடத்த முடியாது. பார்லிமெண்ட் எல்லா விஷயங்களையும் நடத்த முடியாது. பார்லிமெண்டில் நிறைவேற்றப்படுகின்ற சட்டங்கள் நீதிமன்றங்களின் பரிசீலனைக்குட்பட்டவை. ஆனால், இங்கிலாந்து பார்லிமெண்ட் நிறைவேற்றுகிற சட்டங்களை எந்த நீதி மன்றமும் மறுக்க முடியாது. இந்த அம்சம் வரலாறு பூர்வமானதாகும். பிரிட்டிஷ் பார்லிமெண்டின் அதிகாரம் மன்னரிடமிருந்து படிப்படியாக எடுத்துக்கொள்ளப் பட்டது. ஆனால் இந்தியாவில் பொதுத்தேர்தல்களில் மக்கள் அளித்த வாக்குகளின் மூலமாகவே பார்லிமெண்ட் உருவாகி அதிகாரத்தையும் பெற்றது.

ராஜ்ய சபாவின் வேலை ஒட்டிக்கிரட்டியானது தானே என்று கூறப்படுவதுண்டு. லோக் சபை நிறைவேற்றியவைகளை ராஜ்ய சபையும் நிறைவேற்றிக் கொண்டிருக்குமாயின் அந்த ஸ்தாபனத்துக்கு அவசியமில்லை; லோக் சபைக்கு எதிராகச் சென்றால் வீண் தொல்லைதான் என்றும் வாதிக்கிறார்கள். ஆனால் சென்ற கால அனுபவத்தின்படிப் பார்த்தால் ராஜ்ய சபைக்கு நிச்சயமானதும் முக்கியமானதுமான பணி இருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். ராஜ்யசபை அங்கத்தினர்கள் நேரடியாகத் தெரிந்தெடுக்கப்படவில்லையாதலால், திறமையும் அனுபவமும் மிக்கவர்களை, அவர்கள் தேர்தலில் போட்டியிடத் தயங்கினாலும், பார்லிமென்டுக்குக் கொண்டுவர பல்வேறு கட்சிகளுக்குச் சந்தர்ப்பமிருக்கிறது. மேலும் சர்க்கார் அதன் கொள்கைகளை அடிக்கடி பரிசீலித்துத் திருத்தியமைக்கவும் ராஜ்ய சபா உதவுகிறது.

சென்ற பத்து ஆண்டு காலத்தில் நமது பார்லிமெண்ட் மகத்தான சாதனைகளைப் புரிந்துள்ளது. மக்களின் கருத்துக்களை சமூக விஷயங்களிலும் பொருளாதார விஷயங்களிலும், அரசியல் ரீதியாகவும் கிளறிவிட்டு மாற்றி அமைத்திருக்கிறது. சமூகத்துறையில் ஹிந்து மத ஒழுங்குபாடு மசோதாவையும் வரதக்ஷிணைத் தடை மசோதாவையும் சட்டமாக்கியிருக்கிறது. ஐந்தாண்டுத் திட்டங்களும், அவற்றை நிறைவேற்றுவதற்கான சட்டங்களும், பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்துவதற்கான சொத்து வரிகளும், பிற வரிகளும் பொருளாதாரத் துறையில் பார்லிமெண்ட் நிகழ்த்தியுள்ள சாதனைகள்; ராஜ்யங்கள் புனரமைக்கப்பட்டிருப்பதுவும், கூட்டுசேராக் கொள்கையும், அரசியல் துறையின் உயரிய அம்சங்கள்; இந்த மகத்தான சாதனைகளெல்லாம், நமக்குப் பெருமை தருகின்றன.

பார்லிமெண்டின் இன்னொரு மகத்தான சாதனை, பெரும்பான்மை பலம் வாய்ந்த கட்சியின் ஆதரவில் நடைபெறுகிற சர்க்கார், மக்களின் அபிலாசைகளைப் புறக்கணிக்க முடியுமென்றாலும்கூட, பார்லிமெண்ட் அந்த அபிலாஷைகளைத் திறம்படப் பிரதிபலிக்கச் செய்திருப்பதாகும். தங்கக் கட்டுப்பாடு உத்தரவும், கட்டாய சேமிப்புத் திட்டமும் திருத்தியமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்க உதாரணங்கள். நேபா தோல்விகளைப் பற்றி விசாரணை நடத்தவேண்டுமென்ற கோரிக்கையும், அந்த அறிக்கை பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்பட்ட நிகழ்ச்சியும் இன்னொரு எடுத்துக்காட்டு.

மேலும் சீனத் தகராறின் போது நமக்குத் தோல்வி ஏற்பட்டதைத் தொடர்ந்து நாட்டில் கோப உணர்ச்சி எழுந்தது. அதன் பயனாக சர்க்கார் மிகவும் முக்கியமானதும் கடும் விளைவுகளுக்குட்பட்டதுமான பல முடிவுகளை மேற்கொண்டனர்; அதாவது மெஜாரட்டி சர்க்கார், வாக்காளர்களின் ஆசைகளையும், அபிலாஷைகளையும் கூர்ந்து கவனிக்கிறார்கள் என்பது புலனாகிறது. பார்லிமெண்ட் சபை பொது மக்களின் கருத்தை அளவிடுகிற கருவியாக விளங்குகிறது. நெருக்கடி காலத்தின் போது நமது வெளிநாட்டுக் கொள்கை, ஜனநாயக அமைப்பு, சோஷலிஸபாணி சமுதாயம் ஆகியவை ஆபத்தான நிலையிலிருந்தபோது, பார்லிமெண்ட் புரிந்த சேவை போற்றற்குரியது. ஆரம்பத் தோல்விகளின் காரணமாக எரிச்சலும், கோபமும் காணப்பட்டது. ராணுவத் தயார் நிலைபற்றிய பல வதந்திகள் பரவின. இவை போன்ற ஒரு சில நிகழ்ந்த போதிலும், வீரமாகப் போராடி எதிரியை விரட்ட வேண்டுமென்ற மகத்தான முடிவில் பார்லிமெண்ட் இதுவரையில் இல்லாத ஒற்றுமையை வெளிக்காட்டியது. பார்லிமெண்டில் ஜனநாயக உரிமை எதுவும் தடுக்கப்படவில்லை; நமது கொள்கைகளின் சகல அம்சங்கள் பற்றியும் அது விவாதம் நடத்திக்கொண்டுதான் வந்தது. நமது ஜனநாயகம் ஆழமாக வேரூன்றித் தழைத்துவிட்டது என்பதற்கு இது ஒரு உதாரணமாகும்.

பார்லிமெண்டில் நடைபெறுகிய விவாதத்தின் தரத்தைப் பொறுத்தவரையில் சம்பிரதாயத்திலும், அந்தஸ்திலும், சாதனைகளிலும், விவாதத் திறமையிலும் அவை பெரும்பாலும் உயர்ந்த தரத்திலும், சாதுரியமாகவும், சுருக்கமாகவும் இருக்கின்றன என்றே கூற வேண்டும். நமது பார்லிமெண்டின் சராசரி அங்கத்தினர், பார்லிமெண்டரி வேலைகளுக்கேற்றபடித் தம்மை ஆயத்தம் செய்து கொள்ளவில்லை என்பது உண்மைதான். சபையின் கௌரவம் எப்போதும் பாதுகாக்கப்பட்டே வருகிறது. சில நேரங்களில் ரசாபாசமான நிகழ்ச்சிகள் நடைபெற்றபோதிலும் சபா நாயகரின் கடும் ஆணைகளுக்கு அவர்கள் தலைவணங்குகின்றனர். இது வெறும் தாற்காலிகப் போக்குதான்; காலப்போக்கில் அவர்கள் சபையின் பெருமையை உணர்ந்து வணக்கத்துடன் நடந்துகொள்ளுவார்கள்.

பார்லிமெண்டிலுள்ள எதிர்கட்சிகள் பலம் வாய்ந்தவையுமல்ல; ஒரே பிரச்னையின் கீழ் ஒன்று சேரக்கூடியவையுமல்ல. ஆனால், எதிர்கட்சி அங்கத்தினர்களில் சிலர் முக்கியமான பொது ஜனத் தலைவர்களாக மதிப்புற்று விளங்குவதால் அவர்களுடைய பேச்சுக்களும், கருத்துக்களும், கண்டனங்களும் கவனமாகக் கேட்கப்படுகின்றன. சர்க்காரும் அவற்றுக்கு மதிப்பளித்து, அதன் கொள்கைகளை மாற்றியமைக்கின்றனர்.

நமது பார்லிமெண்ட், மக்களின் உரிமையின் நிலைக்களமாக விளங்குவது பெருமைக்குரியதாகும். இந்த பார்லிமெண்டரி சம்பிரதாயம் தொடர்ந்து நிச்சயமாக நம்பலாம். *

### தேசீயத் திட்டங்கள்

# கட்டுமானக் கார்ப்பொரேஷன்

தேசீயத் திட்டங்கள் கட்டுமானம் கார்ப்பரேஷன் இந்த ஆறு வருட காலத்துக்குள், பெரிய தேசீயத் திட்டங்களின் கட்டுமான வேலைகள் சம்பந்தப்பட்ட வரையில், தனிப்பட்ட காண்ட்ராக்டர்களுடன் நன்கு வெற்றிகரமாகப் போட்டியிட முடியும் என்பதையும், கட்டுமானச் செலவில் கணிசமான அளவுக்குச் சிக்கனம் செய்ய முடியும் என்பதையும், வேலைகளைத் தக்க அவகாசத்தில் தரமாகச் செய்து முடிக்க முடியும் என்பதையும் நிரூபித்துக் காட்டியிருக்கிறது.

திட்ட வேலைகளின், குறிப்பாய் பெரிய பாசனத் திட்டங்கள், மின்னிசைத் திட்டங்கள் ஆகியவற்றின் செலவுகளை நியாயமான வரம்புகளுக்குள் அடக்க முடியாவிட்டால், திட்டத்தின் அடிப்படை நோக்கமே தோல்வி அடைந்துவிடும் என்பது நன்கு தெளிவாக உணரப்பட்டது. அப்போதிருந்த நிலவரப்படி, தங்களது சொந்த லாபத்திலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வந்த தனிப்பட்ட காண்ட்ராக்டர்களின் தயவையே சர்க்கார் நம்பியிருக்க வேண்டியிருந்தது.

திட்ட வேலைகள் சம்பந்தமான அபரிமிதச் செலவுகள், தவிர்க்கக்கூடிய தாமதங்கள், திறமையின்மை, லஞ்ச ஊழல்கள் ஆகியவை பற்றிப் பார்லிமெண்ட் கமிட்டிகளும், ஆடிட்டர்-ஜெனரலும் கவலை தெரிவித்தனர். மக்களின் பிரதிநிதிகள் பார்லிமெண்டிலும் மற்ற இடங்களிலும் இதுபற்றிக் குறை கூறினர்.

ராஜ்யங்களிலுள்ள நிர்வாகஸ்தாபனங்கள், பெரிய நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களின் கட்டுமான வேலைகளை ஏற்று நிறைவேற்றக் கூடிய அளவுக்கு அவ்வளவு வலிமை கொண்டவையாக இல்லை.

பெரிய நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களின் கட்டுமான வேலைகளை நிறைவேற்றுவதற்கு ஏற்ற சாதன வசதிகளும், தகுதியும் கொண்ட தனிப்பட்ட காண்ட்ராக்டர்களின் எண்ணிக்கையும் மட்டாகவே இருந்தது.

வேலைத் திட்டங்களில் உபரியாகிவிடுகிற அனுபவம் வாய்ந்த தொழில்நுட்பச் சிப்பந்திகள் இதர திட்டங்களில் எப்போதும் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளப்படவில்லை; ஏனென்றால் சம்பளமும், சேவை நிபந்தனைகளும் ராஜ்யத்துக்கு ராஜ்யம் வித்தியாசமாக இருந்தன. வேலைக்கு உபயோகமான உபரி இயந்திர சாதனங்கள் இதர திட்டங்களிலிருந்து கிடைத்தபோதிலுங் கூட, திட்ட அதிகாரிகள் புதிய இயந்திர சாதனங்களை வாங்கவேண்டும் என்று கொண்டிருந்த மனப்பான்மையானது, அத்தகைய சாதனங்கள் அதிகபட்சம் பயன்படுத்தப்படுவதை சாத்தியமில்லாமல் ஆக்கிவிட்டது.

எனவே இத்தகைய நிலைக்கு ஒரு பரிகாரம் காணவேண்டும் என்ற நோக்கத்துடன், முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூன்றாவது வருடத்தில், அதாவது 1955-ல், ஸ்ரீ நகரில் நடத்தப்பட்ட கருத்தரங்கு ஒன்றில் யூனியன் பாசன-மின்சார மந்திராலயம் இந்த விஷயத்தை விவாதத்துக்கு எடுத்துக் கொண்டது. அக்கருத்தரங்கில்தான், தேசீயத் திட்டக் கட்டுமான கார்ப்பொரேஷன் அமைக்கப்படவேண்டும் என்ற கருத்து உருவாயிற்று. பிறகு 1957 ஜனவரி 9-ந் தேதியன்று இக்கார்ப்பொரேஷன் ஏற்படுத்தப்பட்டது.

இக் கார்ப்பொரேஷன் செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 183 லட்சம்; அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் ரூ. 200 லட்சம்; இந்திய சர்க்காரும், சம்பந்தப்பட்ட ராஜ்ய சர்க்கார்களும் இக் கார்ப்பொரேஷனில் மூதலீடு செய்துள்ளனர்.

இக் கார்ப்பொரேஷனின் நிர்வாக மேற்பார்வையானது, ராஷ்டிரபதியினால் நியமிக்கப்பட்டுள்ள டைரெக்டர்கள் போர்டு ஒன்றின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்து வருகிறது.

மானேஜிங் டைரெக்டர் ஒருவர் இக்கார்ப்பொரேஷனின் அன்றாட நிர்வாகத்தை கவனித்து வருகிறார். ஒரு பிரதம எஞ்சினியர், ஒரு நிதி ஆலோசகர், தொழில்நுட்ப அதிகாரிகள் சிப்பந்திகள், வேறு வகைப்பட்ட அதிகாரிகள், இப்பந்திகள் ஆகியோர் அவருக்கு உதவியாக இருந்து வருகின்றனர். இதன் தலைமைக் காரியாலயம் புதுடில்லியில் இருக்கிறது.

தனித்தனிக்கவ - யூனிட்டுக்கு இயங்கி வருகின்றன. அந்தந்த வேலைத் திட்டங்களின் அளவுகளுக்கேற்ப ஒரு நிர்வாக எஞ்சினியரோ, அல்லது ஒரு சூப்பரின்டெண்டிங் எஞ்சினியரோ அந்த யூனிட்டுகளுக்குப் பொறுப்பு வகித்து வருகின்றனர்.

இப்போது இக்கார்ப்பொரேஷன், மிகச் சிக்கல் நிறைந்த எல்லா ரக எஞ்சினியரிங் கட்டுமான வேலைகளையும் ஏற்று நிறைவேற்றக்கூடிய திறமை படைத்ததாக விளங்குகிறது.

பல்வேறு பிரிவுகளிலும் அதி உன்னதத் திறமையும், அநுபவமும் வாய்ந்த எஞ்சினியர்களும் தொழில்நுட்பச் சிப்பந்திகளும் இககார்ப்பொரேஷனில் பணியாற்றி வருகின்றனர். இவர்கள் திட்டமிடுவதிலும், வேலைகளை நிறைவேற்றுவதிலும் விசேஷத் திறமை படைத்தவர்கள். பல்வேறு வகையான நதிப்பள்ளத்தாக்குத் திட்டங்களைச் சமாளிக்கவும் எந்தவிதச் சிக்கல் வாய்ந்த இயந்திர சாதனங்களை இயக்கவும் வல்ல தொழில்நுட்பச் சிப்பந்திகள் இங்கே ஏராளமாக இருக்கின்றனர். இக் கார்ப்பொரேஷனிடம் சகலவிதமான இயந்திர சாதனங்களும் இருக்கின்றன. ஆண்டு தோறும் மொத்தம் 40 லட்சம் கனகஜம் மண் பாறை ஆகியவற்றை வெட்டி அப்புறப்படுத்தக்கூடிய அளவுக்கு இயந்திர சாதனங்கள் உள்ளன.

இக் கார்ப்பொரேஷன் ஏற்படுத்தப் பட்டதிலிருந்தே தொடர்ந்து லாபத்திலேயே இயங்கி வருகிறது. பல்வேறு ரகங்களிலும் அளவுகளிலுமான மாபெரும் எஞ்சினியரிங் கட்டுமான வேலைகளை இது நிறைவேற்றி வந்திருக்கிறது. 1961-62 நிதி ஆண்டில் இது மொத்தம் சுமார் ரூ 310·41 லட்சம் மதிப்புக்குக் கட்டுக் வேலைகளை நிறைவேற்றியது; அந்த ஆண்டில் 4 சதவிகிதம் டிவிடெண்ட் அறிவித்தது. சென்ற ஆறுவருட காலத்தில் இக்கார்ப்பொரேஷனின் சிறப்பான கட்டுமான சாதனைகளில், டில்லியில் வஜீராபாத் நீர்த்தேக்கம், பீகாரில் கோஸி அணைக்கட்டு, சில விமான நிலையங்கள் ஆகியவை குறிப்பிடத் தக்கவையாகும்.

வஜீராபாத் நீர்த்தேக்கம் மொத்தம் சுமார் 60 லட்சம் செலவில் ஏழு மாத காலத்துக்குள் கட்டி முடிக்கப்பட்டது. இந்த நீர்த்தேக்கத்திலிருந்து டில்லிக்குக் குடிதண்ணீர் சப்ளை செய்யப்படுகிறது.

கோஸி அணைக்கட்டு மொத்தம் சுமார் ரூ 6 கோடி செலவில் குறிப்பிட்ட கால வரையறைக்குள் கட்டி முடிக்கப்பட்டது.

அவசர நிலையை யொட்டி பாதுகாப்புத் துறையில் மொத்தம் சுமார் ரூ 243 லட்சம் மதிப்புள்ள கட்டுமான வேலைகளையும் இக் கார்ப்பொரேஷன் நிறைவேற்றியுள்ளது.

அண்டை நாடுகளுக்குங்கூட இது உபயோககரமான முறையில் பணியாற்றி வருகிறது. நேப்பாளத்தில் திரிசூலி ஜலமின்சாரத் திட்டத்தில் மொத்தம் சுமார் ரூ. 220 லட்சம் மதிப்புள்ள வேலைகளை இது மேற்கொண்டிருக்கிறது. அதோடுகூட, காத்மாண்டுனிலிருந்து சுமார் 40 மைல் தூரத்தில் டாடி நதியின் மீது நிரந்தர உருக்குப் பாலம் ஒன்றை இக்கார்ப்பொரேஷன் மிகக் குறுகிய காலத்துக்குள் கட்டி முடித்துள்ளது.

தேவை அதிகரித்து வருவதைச் சமாளிப்பதற்காக, இக்கார்ப்பொரேஷன் விஸ்தரிப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. டில்லி, கல்கத்தா, பிலாஸ்பூர் ஆகிய இடங்களில் மூன்று பிராந்தியக் காரியாலயங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு காரியாலயமும் அடிஷனல் பிரதம எஞ்சினியர் ஒருவரின் பொறுப்பில் இயங்கி வருகின்றன. அதிகப்படி இயந்திர சாதனங்களை வாங்குவதில் இக் கார்ப்பொரேஷன் ஏற்கெனவே ஏராளமான பணத்தைச் செலவு செய்கிறது; திருக் மேலும் செலவு செய்ய இது உத்தேசித்திருக்கிறது. இயந்திர சாதனங்கள் பூரணமாகப் பயன்படுத்தப்பட்டு வரும்படி பார்த்துக் கொள்வதோடுகூட, நன்கு பராமரிக்கப்பட்டும் பழுது பார்க்கப்பட்டும் வரும்படி பார்த்துக் கொள்வதற்காக, ஆக்ராவில் மத்திய பட்டறை-ஸ்டோர்ஸ் ஒன்று அமைக்கப் பட்டிருக்கிறது. சிக்கனமாக உற்பத்தி செய்யப்படக்கூடிய இயந்திர உறுப்புகளும் அங்கே தயாரிக்கப்படும்.

மூன்றாவது திட்டத்தில் பெரிய கட்டுமான வேலைகள் நிறைவேற்றப் படவிருக்கின்றன. அடுத்த ஐந்தாண்டுத் திட்டங்களில் இன்னும் பெரிய திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டியிருக்கும். எனவே இக் கார்ப்பொரேஷன் தனது சிறப்பான பணியைத் தொடர்ந்து மேற்கொண்டு வரும். •



# பத்தாவது ரேடியோ சங்கீத சம்மேளனம்

ஆகாசவாணி ஆண்டு தோறும் நடத்தி வரும் ரேடியோ சங்கீத சம்மேளனம் இவ்வாண்டில் நவம்பர் 2ந்தேதியிலிருந்து 10ந்தேதி வரை நடைபெறும். நாட்டில் உள்ள மிகப் பிரபல சங்கீத வித்வான்கள் பலரின் கச்சேரிகளைக் கேட்டு ரசிக்கும் வாய்ப்பு பொதுமக்களுக்கு அச்சமயத்தில் கிடைக்கும். சம்மேளனத்தில் வழக்கம் போல கர்நாடக சங்கீதத்துடன் ஹிந்துஸ்தானி சங்கீதமும் இடம்பெறும். தென் பிராந்திய நிலையங்களில் எட்டுக் கச்சேரிகள் சென்னையிலும், மூன்று கச்சேரிகள் வீதம் ஹைதராபாத், பெங்களூர் ஆகியவிடங்களிலும் இரண்டு கச்சேரிகள் விஜயவாடாவிலும் ஒரு கச்சேரி திருவனந்தபுரத்திலும் நடைபெறும். சென்னையிலும், பெங்களூரிலும் ஒரு கச்சேரி வீதம் ஹிந்துஸ்தானி இசைப் பிரிவில் இடம்பெறும். டில்லியில் கர்நாடக இசைப் பிரிவில் இரண்டு கச்சேரிகள் இடம்பெறும். சங்கீத சம்மௌனத்தை யொட்டி, டில்லியில் 6, 7, ந் தேதிகளில் ஜஸ்டிஸ் டி. எல். வெங்கடராமய்யர் தலைமையின் கீழ் "இசைத் துறையில் புதிய போக்குகள்" என்ற விஷயம் பற்றிய உரைக்கோவை ஒன்றும் நடைபெறும். பிரபல இசைத்துறை வல்லுனர்கள் அதில் பங்கு கொள்வார்கள்.

முந்திய ஆண்டுகளைப் போலவே இவ்வாண்டிலும் சங்கீத சம்மேளனத்துக்கு முன்னதாக நாடு முழுவதிலும் இசைப் போட்டிகளும் நடத்தப்பெறும். இசைத் துறையில் புதிய திறன்களை கண்டுபிடித்து வெளிப்படுத்துவதே அவற்றின் முக்கிய நோக்கமாகும். இப்போட்டிகளுக்கான பரிசுகள் இவ்வாண்டில் 42 ஆக அதிகரிக்கப்பட்டுள்ளது. நவம்பர் 2ந்தேதியன்று சம்மேளன வைபவத்தின் ஆரம்பத்தில் ராஷ்டிரபதி எஸ். ராதாகிருஷ்ணன் இப்பரிசுகளை வழங்குவார்.

ஆரம்ப விழா நிகழ்ச்சிகள் பற்றிய ரேடியோ செய்தி மலர் ஒன்றும் அன்று இரவு 8-30 மணிக்கு ஒலி பரப்பப்படும்.

★

# தென்னாப்பிரிக்காவின் புதிய பிரச்சனை

அண்மையில் தென் ஆப்பிரிக்கா பிரதமர் டாக்டர் வெர்வோர்டும் அவருடைய அயல் நாட்டு இலாகா அமைச்சர் லொவ் என்பவரும் தென் ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் நிர்வாகத்தின் பாதுகாப்பின் கீழ் இருக்கும் பஸுடோலாண்டு பெசுவானாலாண்டு, ஸ்வாஸிலாண்டு என்ற பெயர் கொண்ட மூன்று பிரதேசங்களையும் தங்களுடைய நாட்டுடன் இணைத்துக் கொள்ள வேண்டுமென்ற ஓர் கருத்தை வெளியிட்டார்கள். ஒரு காலத்தில் வெள்ளையர்களின் பலம் கொண்ட எதிர்க் கட்சியாகிய "ஐக்கியக் கட்சி" இயங்கும் நேடால் மாநிலத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டு வரும் பொழுது தென் ஆப்பிரிக்கா பிரதமர் மேற்கூறிய தன் கருத்தை வலியுறுத்தினார். இப்பிரதேசத்தில் பெரும்பாலோர் கையாளும் மொழி ஆங்கிலம். இக்கருத்தை இவர் வெளியிட்டதற்குக் காரணம் யாதுயெனில், இவர் நிர்வாகம் இன ஒதுக்கல் கொள்கைக்கு அரியாசனம் அளித்து, அதைப் பேணும் செயலானது, ஓர் பெரிய பிரச்சனையாக உருவெடுத்து அகில உலக மக்களின் எதிர்ப்புக்கு இலக்காகும் என்பது. இவ்வித சூழ்நிலை உருவெடுக்காமல் இருப்பதற்கு பிரிட்டிஷர்களின் பாதுகாப்பு நாடுகளைத் தன்னுடைய நாட்டுடன் இணைத்துக் கொண்டால் அப்பிரதேசங்கள் கருப்பர்களுக்கு ஒதுக்கிவிடப் பயன்படும் என்பதே.

பிரிட்டனும் தென் ஆப்பிரிக்காவின் இன வெறுபபுக் கொள்கையை ஆமோதிக்காமல் இத்திக்கில் அவர்களுடைய எதிர்ப்பை வலியுறுத்த இந்நாட்டிற்கு ஆயுதங்கள் விற்பனையைத் தடை செய்ய முன் வந்திருக்கிறது. இப்போக்கைக் கண்டு வெகுண்டு அந்நிய நாட்டு இலாகா அமைச்சர் லொவ் லண்டனுக்குத் தங்கம் விற்பனை செய்வதைத் தடை செய்யப் போவதாகவும், பிரிட்டன் ஸைமன்ஸ்டவுன் என்னும் துறைமுகப் பட்டினத்தைக் கப்பற்படை தளமாக உபயோகிக்கத் தென் ஆப்பிரிக்காவுடன் கொண்டுள்ள ஓர் உடன்படிக்கையை ரத்து செய்யப் போவதாகவும் மிரட்டிப் பேசுகிறார்.

தென் ஆப்பிரிக்காவின் கொள்கை இவ்வாண்டு உள்நாட்டு உறவிலும், அந்நிய நாட்டு உறவிலும் ஓர் பெருத்த அளவுக்குப் பிற்போக்கடைய அடிகோலியுள்ளது. ஆப்பிரிக்காவிலுள்ள ஏனைய நாடுகள் அனைத்தும் ஒன்று கூடி தென் ஆப்பிரிக்காவுக்கு எதிர்ப்புக் காட்ட முன் வந்துள்ளது. ஓர் சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்த செய்தி. இக்கூட்டு எதிர்ப்பின் காரணமாக தென் ஆப்பிரிக்கா சர்வதேச தொழிலாளர் ஸ்தாபனத்திலிருந்து வெளியேற்றப் பட்டிருக்கிறது. மற்றொரு ஐ. நா. ஸ்தாபனமாகிய ஆப்பிரிக்கா பொருளாதார கமிஷனிலிருந்தும் தென் ஆப்பிரிக்கா வெளியேற நேரிட்டிருக்கிறது. இந்நாட்டு விமானங்கள் ஏனைய ஆப்பிரிக்கா நாடுகளின் மீது பறந்து செல்ல அனுமதி ரத்து செய்யப்பட்டுள்ளது. பிரிட்டனைத் தவிர பல மேல் நாடுகளும் இந்நாட்டிற்கு ஆயுத விற்பனைக்குத் தடை செய்துள்ளன. ஐ.நா. பொதுச்சபையிலும் நாளுக்கு நாள் பொருளாதார துறையில் இந்நாட்டுக்குப் பல தடைகளை விதிக்கக் கொண்டு வரும் பிரேரணைகளுக்கு அங்க நாடுகள் ஆதாரம் காட்ட ஊக்கம் காட்டுகின்றன.

மேற்கூறியவைகள் யாவையும் காட்டிலும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது பல ஆப்பிரிக்கா நாடுகள் ஆப்பிரிக்கா தேசீய இயக்கங்களாகிய ஆப்பிரிக்கா தேசீய காங்கரஸ், சர்வ ஆப்பிரிக்கா காங்கிரஸ், இவ்வரு ஸ்தாபனங்களின் அங்கத்தினர்களுக்கு இராணுவப் பயிற்சி அளிப்பதற்கும், ஆயுதங்கள் விநியோகிப்பதற்கும் முன் வந்துள்ளன. இவ்வாண்டு தென் ஆப்பிரிக்காவில் தலையெடுத்த கிளர்ச்சிக்கு மறைமுகமாக இவ்விரண்டு ஸ்தாபனங்களும் ஆதாரம் அளித்தன. இவ்விரண்டு ஸ்தாபனங்களின் குறிக்கோள் தென் ஆப்பிரிக்கா வெள்ளையர்களின் ஆதிபத்யத்தை அறவே ஒழித்துக் கட்டக் கையாள வேண்டிய கருவி பலாத்காரம் ஒன்றே என்பது.

ஆனால் இதுவரை அவர்களுடைய செயல்பாடு விஸ்தரிக்கப்படவில்லை. மேற்கூறிய இரண்டு ஸ்தாபனங்கள தவிர, மூன்றாவது ஸ்தாபனம் ஒன்றும் செயல்பட முன் வந்துள்ளது. இதற்கு தேசீய விடுதலைக் குழு என்று பெயர். இது விசேஷமாகக் கையாளப் போவது நாசவேலை. இக்குழு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் போகோ நகரில் அண்மையில் தலையெடுத்த ஓர் சிறிய பலாத்காரப் புரட்சி; சில புகைவண்டி நிலையங்களிலும், மின்சார உற்பத்தி நிலையங்களிலும் வெடித்த குண்டுகள் முதலியன. இக்காரணங்களால் தென் ஆப்பிரிக்கா நிர்வாகம் ஓர் பெரிய படையைத் திரட்டி பதிலடி கொடுக்க மிக ஆர்வத்துடன் முன் வந்துள்ளது. நாளுக்கு நாள், நாட்டு அரசியலில் இத்தகைய சூழ்நிலை ஏற்பட்டு நாட்டு அமைதியையும், உலக அமைதியையும் பாதிக்க அடிகோலுவதை உலக நாடுகள் ஆமோதிக்காது. ஆகையால், இதற்குத் தீர்வு காண வெர்வோர்டு ஆப்பிரிக்கர்கள் வாழும் சில பகுதிகளை வளைத்து அதற்கு "ட்ரான்ஸ் பண்டுஸ்டான்" என்று பெயர் கொடுத்து அதைத் தன் நிர்வாகத்தின் கீழ் ஓர் சுய ஆட்சி புரியும் பகுதியாக உருவாக்கியுள்ளார். இப் பண்டுஸ்டானின் நிலப்பரப்பு நாட்டின் நிலப்பரப்பில் 13 சதவிகிதம் என்று சொல்லப்படுகிறது. இனி மேல் இப்பண்டுஸ்டானை விஸ்தரிக்க வேண்டுமென்றால் வெள்ளையர்கள் அனுபவத்தில் இருக்கும் பண்ணைகளை இணைத்துக் கொள்ள வேண்டி வரும். இவ்வாறு செய்தால் அது இவருடைய வீழ்ச்சிக்கு வித்திடும். ஆகையால், இவருடைய நாட்டம் மேற்கூறிய மூன்று பிரிட்டிஷர்களுடைய பாதுகாப்பு நாடுகளின் மீது விழுந்திருக்கிறது. இந்நாடுகளில் யாவரும் ஆப்பிரிக்கர்களே. ஆதலால், இப்பகுதிகளில் தன் நிர்வாகத்திலிருந்து ஆப்பிரிக்கர்களை வெளியேற்றிக் குடியிருக்க வாய்ப்புக் கொடுப்பது தென் ஆப்பிரிக்காவில் வெள்ளையர்கள், வெள்ளையர்கள் அல்லாதவர்கள். இவ்விரு இனத்தார்களும் தனித்தனியே அவரவர்களின் "ஸ்தான்"களில் குடியிருக்க நேரிட்டு அது இப்பிரச்சனைக்கு ஓர் வழியில் தீர்வு காணும் என்பது இவர் கொண்டுள்ள கருத்து.

பிரிட்டன் இம் மூன்று நாடுகளையும் எளிதாகத் தென் ஆப்பிரிக்காவிற்குப் பரிசளிக்க முன் வருமா என்பது ஒரு பெரியக் கேள்விக் குறி. இம்மூன்று நாடுகளும் தினசரி வேண்டிய அவர்களுடைய தேவைப் பொருள்களைத் தென் ஆப்பிரிக்காவிலிருந்து தான் பெற வேண்டியிருப்பதால் வெர்வோர்டு இந்நாடுகளைப் பொருளாதாரத் துறையில் நசுக்கலாம்; அரசியல் துறையில் ஒதுக்கலாம், அல்லது இராணுவத்தைக் கொண்டு ஆக்கிரமிக்கலாம். இந்நாடுகளைப் பெறுவது இன்றைய தென் ஆப்பிரிக்கா குடியரசு அரசியலில் ஓர் முக்கியப் பிரச்சனையாகத் தலையெடுத்திருக்கிறது. உலக நாடுகள் யாவும் இத்திக்கில் முடிவு எவ்வாறு உருவாகும் என்று கூர்ந்து கவனிக்கின்றன.

★

### விசித்திர ஏணி

ஆல்பிரட் நோவாக் என்பவர் விசித்திர ஏணி ஒன்றை கண்டு பிடித்திருக்கிறார். கைகளையே உபயோகிக்காமல் இந்த ஏணியின் மூலம் எவ்வளவு உயரம் வேண்டுமானாலும் ஏறி வேலை செய்யலாம். இதில் ஏறியிருக்கும்போது எவ்வித விபத்தும் ஏற்படாமல் இருக்க வழி செய்யப்பட்டுள்ளது. ஆகவே சிறு உயர ஏணிகள் பலவற்றை கொண்டு இணைத்து பெரியதாக செய்து கொள்ளும் அவசியம் இனி இல்லை. இரு கயிறுகளுக்கிடையே, ஏணியில் வேலை செய்யும் தொழிலாளி மேலும் கீழுமாக ஏறி இயங்க முடியும். காலைத் தூக்கி மேலே வைத்தால் கயிறு தானாகவே இயங்கி வேலை செய்கிறது. மிக உயரத்தில் வேலை செய்யும் தொழிலாளி கீழே இறங்க விரும்பினால் லீவரை திருப்பி விட்டு ஒவ்வொரு படிக்கும் ஒரு சிறிதளவு மட்டுமே காலை உயர்த்த வேண்டியிருக்கும். ஒரு அடி எடுத்து வைத்ததும் பிரேக்குகள் தானாகவே இயங்குகின்றன. இரு கால்களுமே நகர்த்தப் பட்டு விட்டாலும் குப்புற கீழே விழ வேண்டிய அவசியம் ஏற்படாது இதில் கால் தவறி விழுவதற்கான ஹேதுவே இல்லை.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஞு 28 | 20—10—1963 | வாரம் 50

# புதிய ஒளி

மக்களின் தலைவர் ஸ்ரீ காமராஜ் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தலைமைப் பீடத்தை அலங்கரிப்பார். ஏதோ சாதாரணமாக நடைபெறுகின்ற சம்பவம் என்று இதை எண்ணக்கூடாது. வழிதெரியாமல் இருட்டில் தவித்துக் கொண்டிருந்த ஒரு சமுதாயத்தின் வாழ்வில் திடீர் என்று எதிர்பாராத புதிய வெளிச்சம் தென்படுகிற மாதிரி ஏற்பட்டுள்ள ஒரு சம்பவம் இது.

அரசியல் என்பது தந்திரமும் சூழ்ச்சியும் ஏமாற்றும், நிறைந்த ஒரு அமைப்பு என்பதை உலகம் எந்த நாளும் அறியும். இதில் ஒரு திருப்பத்தை உண்டாக்கி உண்மை, நேர்மை, உழைப்பு, தியாகம் ஆகியவை தான் நேரான அரசியல் என்பதை மிகுந்த ஆற்றலுடன் விளக்கிக் காட்டியவர் மகாத்மா காந்தி. அப்படிப் புதிய வெளிச்சம் கொண்டு வருவதற்கு காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தான் மகாத்மா தமது கைக் கருவியாகக் கொண்டிருந்தார். காந்தியடிகளின் ஆசியைப் பெற்றிருந்த பாக்கியம் ஒன்றினுல் தான் தேசபக்தர்களான மாணிக்கங்களைத் தனது அமைப்பில் கொண்டிருக்கும் தகுதியும் காங்கிரசுக்கு உண்டாயிற்று. காந்தியடிகளுக்குப் பின்னர் காங்கிரஸில் உன்னதமான லட்சிய வேகமும் தியாக சீலமும் குன்றிப்போய் விட்டது. தியாக மனப்பண்பும் சத்திய வெறியும் படைத்தவர்கள், காங்கிரஸின் புதிய போக்கில் சமாளித்து நிற்க முடியாதவர்கள் பலர் ஒதுங்கிக் கொண்டு விடவும் நேர்ந்தது. ஸ்தாபனத்தை விட முடியாமலும், புதிய போக்கின் வேக்காட்டினுல் வேதனைப்பட்டுக் கொண்டும் கடமையில் நின்று தொடர்ந்து பாடுபட்டுக் கொண்டிருப்பவர்கள் எண்ணிக்கையும் கொஞ்சமென்று சொல்ல முடியாது.

இந்தப் பதினைந்தாண்டுகளில் காங்கிரஸ் இந்த நாட்டின் தாய்ச்சபை என்ற பேராண்மையில் இருந்து தடம்புரண்டு, எத்தனையோ அரசியல் கட்சிகளில் ஒன்றைப் போல உருமாறிக் கொண்டு வந்ததனுல் தான், மக்களிடையில் அதற்கு ஒரு மறுப்பும் எதிர்ப்பும் கொஞ்சங் கொஞ்சமாகத் தோன்றி வந்திருக்கிறது.

மக்களின் தொண்டு ஒன்றைத் தவிர ஏனைய கவர்ச்சிகளுக்கு மறந்தும் இரையாகிவிடாத மனப் பழக்கத்தாலும், ஒப்பற்ற தொண்டாலும் கல்வி கேள்விகளாலும் செல்வம் பதவிகளாலும் உயர்ந்தவர்களென்று கருதபடுகிற எவருமே வியந்து போற்றுகின்ற ஒரு உன்னதமான இடம் இன்று காமராஜருக்கு உரியதாகிறது.

காங்கிரஸ் தலைமைப் பதவிக்கு அப்படிப் பெரிய மதிப்பு எதுவும் பல வருஷங்களாக இல்லாது போய் விட்டது. அந்தப் பெருமை மறுபடியும் நிலைக்கின்ற ஒரு புதிய பாதை காமராஜ் வருகையால் ஏற்படுகிறது. அடி நாளிலிருந்து அணு அணுவாக ஸ்தாபனத்தை வளர்த்த பரம்பரையின் செல்வர் காமராஜ். அவருடைய புதிய பொறுப்பு காங்கிரஸ் சபைக்கும், மக்களின் நல்வாழ்வுக்கும் பயன்படும் என்பதில் சந்தேகமில்லை.

ஸ்தாபன அமைப்பைச் சீர் செய்வது என்பது, இழந்துவிட்ட மக்கள் தொடர்பை மீண்டும் பெறுவதிலும், எதையும் மக்களின் நல்வாழ்வென்ற அடிப்படையில் அணுகிச் செயலாற்றுவதிலும் தான் இருக்கிறதென்பதை அடிக்கடி எடுத்துச் சொல்லும் தலைவர் காமராஜ். ஒவ்வொரு காங்கிரஸ்காரருக்கும் இந்த உண்மை உடலிலும் உணர்ச்சியிலும் பதியும் படியான வழி பிறக்கும் என்ற நம்பிக்கை உதயமாகிறது.

# கண்ணோட்டம்

— ரா. நா.

சென்றவாரம் இதேபகுதியில் காங்கிரஸ் அதிபர் பதவிக்கு திரு. காமராஜர் பெயர் அடிபடுவது பற்றி எழுதுகையில் "காங்கிரஸைத் தமிழகத்தில் பலப்படுத்துவதற்காக தமது முதலமைச்சர் பதவியைத் துறந்த அவர், அந்தத் திருப்பணி பூர்த்தியாகுமுன் அகில இந்தியப் பொறுப்பை ஏற்க தயங்குவதில் ஆச்சரியமில்லை" என எழுதிவிட்டு அடுத்த காங்கிரஸ் அதிபர் யார் என்பது பற்றி விவாதம் ஏற்படாமல் ஏகோபித்து ஒரு தலைவரை தேர்ந்தெடுக்க காங்கிரஸ் மேலிடம் உடனடியாக ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் வற்புறுத்தியிருந்தேன்.

இப்படி எழுதியது அச்சுக்குப் போவதற்குள் காங்கிரஸ் காரியகமிட்டி ஏகமனதாக திரு. காமராஜரே காங்கிரஸ் அதிபராக வேண்டும் எனத் தீர்மானித்தது தமிழர்கள் பெருமைப்பட வேண்டிய விஷயம். 'காமராஜ் திட்டப்படி' தமிழகத்தில் அவர் செய்ய வேண்டிய வேலை தடைப்படலாகாது என்பதற்காக அகில இந்திய காங்கிரஸ் அலுவலகம் சென்னையிலேயே செயலாற்ற அனுமதித்ததற்காக மேலிடத்தை தமிழர்கள் பாராட்ட வேண்டும்.

1926-ல் கௌஹாத்தியில் ஸ்ரீமான் சீனிவாஸ அய்யங்கார் காங்கிரஸ் அதிபர் பதவியை ஏற்ற பிறகு 37 ஆண்டுகளுக்குப் பிறகு திரு. அய்யங்காரின் ஆதரவு பெற்ற திரு. காமராஜர் தலைமைப் பதவி ஏற்பது நாம் பெருமிதமடைய சம்பவம். இதுவரை கல்வி கேள்விகளில் தேர்ந்த, பட்டம் பெற்ற பண்டிதர்களே அதிபர்களாயிருந்திருக்கின்றனர்.

காங்கிரஸ் வரலாற்றில் முதல் தடவையாக உழைப்பால் உயர்ந்த, மக்களின் நெருங்கிய தொடர்பும் ஆதரவும் கொண்ட தொண்டர்களின் மன்னன் இந்த உயர் பதவி ஏற்பது அதிபர் பதவிக்கே சிறப்பளிக்கிறது. தமிழ்த்தாயே பாரத பீடத்தில் அரியாசனம் ஏறும் இம்மகோன்னத நிகழ்ச்சியை தமிழர்கள் சிந்தித்துப் பார்த்து காமராஜரின் திட்டம் வெற்றி பெறக் கை கொடுப்பார்கள் என எதிர்பார்க்கலாம்.

* *

நிலச் சீர்திருத்த சட்டத்தின் மூலம் உழவர்கள் உரிமை பெற முடியாமல், அந்தச் சட்டத்தைப் பயனற்றதாகச் செய்ய நிலசுவான்தார்கள் தங்கள் நிலங்களைப் பராதீனம் செய்கின்றனர் என திட்ட கமிஷன் ராஜ்யங்களுக்கு எடுத்துக் காட்டியுள்ளது. இந்தக் குறைபாட்டை நீக்க நிலசுவான்கள் பாடுபட வேண்டும் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். ஆனுல் திட்டக் கமிஷனின் போக்கையே கண்டித்து நம் பிரதமர் சமீபத்தில் கூறியதை மேற்படி கமிஷன் உறுப்பினர்கள் கவனிக்க வேண்டும்.

நாட்டின் பொருளாதார பாட்டை கவனிப்பதற்காக நிறுவப்பட்ட கமிஷன் அரசாங்க இலாகாக்களைப் பின்பற்றி அவர்களிடம் வரும் விண்ணப்பங்களை பந்தாடுவது போல் இலாகா இலாகாவாக சுற்றுலா செய்ய ஏற்பாடு செய்கின்றனர் என்பது தான் நேருவின் குற்றச்சாட்டு. எவரும் தம் வீட்டைச் செவ்வையாக வைத்துக் கொண்ட பிறகு தான் பிற வீடுகளுடைய அசுத்தங்களைப் பற்றிக் குறிப்பிட வேண்டும். ஐந்தடுக்கு மாடியில் இருந்து கொண்டு ஆமை வேகத்தில் செயல் புரியும் திட்ட கமிஷனின் நடை முறை ஒழிய வேண்டும்.

* *

சீனுவின் காலனி ஒழிப்புப் பிரசாரத்தைப் பற்றி பிரஞ்சு கம்யூனிஸ்டு கட்சி வன்மையாகக் கண்டித்திருக்கிறது. மேற்கத்தி நாடுகளில் காலனி ஆட்சி, சர்வாதிகாரம் இரண்டிற்கும் தூணாக விளங்கும் டிகாலே ஆதரிக்கும் சீன கம்யூனிஸ்டுகள் எப்படி காலனி ஆட்சி ஒழிக்கும் ஆர்வம் தங்களுக்கிருப்பதாக கூறலாம் என பிரஞ்சு கம்யூனிஸ்டு கட்சியினர் கேட்கின்றனர்.

இந்தியா போர்ச்சுகீசிய சர்வாதிகாரப் பிடியிலிருந்து கோவாவை மீட்டிருக்கையில், மகாலோவில் போர்ச்சுகீசிய சர்வாதிகார ஆட்சியை ஆதரித்து அங்கோலியர்களின் விடுதலைப் போராட்டத்தை சீனர்கள் எதிர்க்கையில் இவர்களுக்கு சாம்ராஜ்ய ஆசை இல்லை என்று எப்படிச் சாதிக்க முடியும் என பிரஞ்சு கம்யூனிஸ்டு தலைவர்கள் கேட்பது நியாயமே. இந்திய எல்லையில் சீனர்கள் ஆக்ரமித்ததை பிரஞ்சு கம்யூனிஸ்டுகள் அப்பட்டமாக எதிர்த்திருப்பது பாராட்டிற்குரிய செயல். இதேரீதியில் யுகோஸ்லாவ பத்திரிகையும் சீன ஆக்ரமிப்பைக் கண்டித்திருக்கிறது.

* *

கேரள காங்கிரஸிலுள்ள சச்சரவு பற்றி விசாரிக்க திரு. காமராஜரும் திரு. லால்பகதூர் சாஸ்திரியும் திருவனந்தபுரம் வரவிருக்கின்றனர். சமீபத்தில் அங்கு நடந்த மாகாண காங்கிரஸ் தேர்தலில் குழப்பம் விளைவித்த சிலர் மீது அ. இ. கா. பார்வையாளர் யோசனைப்படி மாகாண காங்கிரஸ் ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதை கேரள முதலமைச்சர் திரு. சங்கர் ஆட்சேபிக்கிருர். இது அர்த்தமற்றது. நாட்டிற்கு வழி காட்ட வேண்டிய காங்கிரஸ்காரர்களே காலித்தனமாக நடந்துகொண்டால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டியது நியாயமே. இதை முதலமைச்சரே ஆட்சேபிப்பதால் அப்படிக் காலித்தனம் செய்தவர்கள் திரு. சங்கரின் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பது திட்டமாகத் தெரிகிறது. ராஜ்யத்தில் சட்டத்தையும் அமைதியையும் நிலைநாட்ட வேண்டியவர் தீச்செயல்களுக்கு ஆதரவளிப்பது வெறுக்கத்தக்க செயல்.

* *

சீன இந்திய எல்லைத் தகராறு பற்றிப் பேச தாமே டில்லியில் நேருவை சந்திக்கத் தயாராயிருப்பதாகச் சீனப் பிரதமர் சூ என்லாய் தெருவித்திருப்பது உலகை ஏமாற்றும் தந்திரம். தாம் ரொம்ப நல்லவர் போலவும் நேரு பொல்லாதவர் என்றும் உலகம் நினைக்கவேண்டும் என்பதற்காக இந்தப் பிரசார தந்திரத்தை அவர் கையாண்டிருக்கிருர். ஆனுல் சமரசத்திற்கான கொழும்பு வல்லரசுகளின் யோசனைகளை இந்தியா முழுதும் ஏற்றிருக்கையில் அவைகளைக் கொள்கையளவில் ஏற்பதாக சீனு கூறுவதன் பொருள் என்ன? மேற்படி யோசனைகள் இந்தியாவிற்கு பூரண திருப்தியளிக்காவிட்டாலும் இந்தியா அவைகளை ஏற்பது வீணுன முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் என்பதற்காகத்தான். கம்யூனிஸத்தின் தாயகமான ரஷ்யாவையே சீனு அவதூறு செய்கையில் இந்தியாவைப் பற்றிப் பொய்ப் பிரசாரம் சீனு செய்வதில் ஆச்சரியமில்லை.

## மத்திய ஹையர் செகண்டரிப் பரீட்சைகள்

1964 மார்ச், ஏப்ரலில் நடைபெறவிருக்கும், மத்திய ஹையர் செகண்டரிக் கல்விபோர்டின் ஹையர் செகண்டரிப் பரீட்சை, ஹையர் செகண்டரித் தொழில் நுட்பப் பரீட்சை, ஹையர் செகண்டரி ஒரு வருடப் படிப்புப் பரீட்சை ஆகியவற்றிற்குத் தனிப்பட்ட முறையில் ஆஜராகும் மாணவர்களிடமிருந்து விண்ணப்ப நமுனுக்களையும் பரீட்சைக் கட்டணங்களையும் ஏற்றுக் கொள்வதற்கான கடைசித் தேதி 1963 அக்டோபர் 16 முடிந்தது.

உரிய தாமதக் கட்டணத்துடன் அவற்றை ஏற்றுக் கொள்வதற்கான கடைசித் தேதி 1963 அக்டோபர் 31. அந்தத் தேதிக்குப் பிறகு விண்ணப்பிக்கவோ கட்டணங்களோ எவையுமே ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

மேற்கண்ட பரீட்சைகளில் ஏதாவது ஒன்றில் போர்டின் விதிகளின்படி தனிப்பட்ட மாணவர்களாகப் பரீட்சை எழுத அருகதை பெற்றுள்ள மாணவர்கள், இதற்கான விண்ணப்ப நமூனக்களை "மத்திய செகண்டரிக் கல்வி போர்டு காரியாலயம், 17-பி, இந்திரப் பிரஸ்தா மார்க், புதுடில்லி 1" என்ற முகவரிக்கு ரூ. 1 அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

அங்கீகரிக்கப்பட்ட பள்ளிக்கூடங்களைச் சேர்ந்த முறையான மாணவர்களிடமிருந்து விண்ணப் நமூனுக்களை ஏற்றுக்கொள்வதற்கான கடைசித் தேதி 1963 நவம்பர் 18; தாமதக் கட்டணத்துடன் ஏற்றுக்கொள்வதற்கான கடைசித் தேதி 1963 டிசம்பர் 2.

## கதர் உற்பத்தி விற்பனை

சென்னை மாநில கதர் கிராமத் தொழில்கள் போர்டின் கீழுள்ள பல்வேறு கதர் நிலையங்களில் சென்ற ஆகஸ்டு மாதத்தில் ரூ. 12,43,030-31 மதிப்புள்ள 3,56,026—24 மீட்டர் கதர் துணி உற்பத்தி செய்யப்பட்டது. அதே மாதத்தில் கதர் விற்பனை டிப்போக்களிலும் மற்றுமுள்ள ஏஜென்சிகள் மூலமும் மொத்தமாகவும் சில்லரையாகவும் ரூ. 8,67,763—89 மதிப்புள்ள 2,19,221—80 மீட்டர் துணி விற்பனை செய்யப்பட்டது.

உதயகாலக் கவிகள் (3)

# பைரன்

— பி. கோதண்டராமன்

மிக உயரிய அந்தர் ஞானத்தில் உதித்துப் பேருண்மையை வெளிப் படுத்தும் கவிதைக்கு உரிய காலம் இனிமேல்தான் வர வேண்டும் எனக் கூறிய ஸ்ரீ அரவிந்தர் பின் பிரிட்டிஷ் பெருங் கவிகளான பைரனும் ( 1788 — 1824 ) வொர்ட்ஸ்வர்த்தும் (1770-1854) படைத்துத் தந்த கவிதைகளின் போக்கைப் பற்றி ஒரு சிற்றாராய்ச்சி செய்கின்றார்.

பைரனும் வொர்ட்ஸ்வர்த்தும் தம் உயரிய ஆன்மாவுக்குரிய வாக்கைக் கண்டு பிடித்து அதைப் பாதுகாப்பதில் உள்ள கஷ்டங்களால் பெரிதும் இடர்பட்டனர். தம் உயர்விலுங்கூட அவர்கள் அடிக்கடி தளர்ச்சியடைந்தனர். பைரனின் மொழியில் ஆற்றல் இருந்தது; வொர்ட்ஸ்வர்த்தின் வெளிப்பாட்டில் கன அறிவு காணப்பட்டது. அவர்கள் தம் இயல்பில் கவிகள் ஆகார். அவர்களின் உள்ளத்தில் அழகுணர்ச்சியோ, கற்பனையோ, அருளாவேசமோ ஓங்கியிருக்கவில்லை.

பைரனிடம் செயலாற்றல் இருந்தது; வொர்ட்ஸ்வர்த்தினிடம் நீதி போதனை செய்யும் இயல்பு காணப்பட்டது. இவை காரணமாக, அவர்களிடம் அப்பட்டமான கவிதைப் பொருளும் வாக்கும் அமையவில்லை. அருளாவேசம் உச்சநிலை அடைந்த போதுங்கூட, அவர்களுடைய கவிதை மொழியில் அறிவே ஓங்கியிருந்ததால், அது தகுதி வாய்ந்ததொரு சாதனமாக விளங்கவில்லை. பைரன் கலைஞன் அல்லர். அவர் அறிவும் ஆழமற்றது. அது அவசரமாக இயங்கியது. தம் தனித் தன்மையின் கட்டாயத்தால் தான் அவர் கவியானார்.

ஆயினும் அவரிடம் இயல்பாக அமைந்திருந்த சக்தி ஆற்றலுடையதாக இருந்தது. அக்கால அறிவையும் மனத்தையும் கலக்கிய யாவற்றுடனும் அது தொடர்புற்று இருந்தது. அவை கீழ்த்தர நிலையில் வேலை செய்தன. ஆகவே உன்னதமான சாத்தியங்களுக்கு அவை எழ முடியவில்லை. வொர்ட்ஸ்வர்த் உள்முகமாகவும், சிந்தனையில் ஒரு முனைப்பட்டும் நினைவில் ஆழ்ந்தும் இருந்தார்.

அதனால் தான் தன் உயர் ஆத்மாவில் கேட்ட குரலை வெளிப்படுத்த முடிந்தது. ஆயினும் அவர் தம் மேதையைப் பெரும்பாலும் சாமானியமான பொது மெய்மையில் பசப்பி அமிழும்படிச் செய்து விட்டார். இருவருமே சாதனை அடையக் கூடிய விரிவை அடையவில்லை. அவர்கள் தம் தனித் தன்மைக்கு இயந்த சரியான காலத்திலும் சூழ்நிலையிலும் இருந்திருந்தால் ஒருகால் அவ்விரிவை அடைந்திருக்கக் கூடும்.

பைரனுக்குத் தம் சொந்த நாட்டில்விட ஐரோப்பாவில் தான் பெரும் புகழ் ஏற்பட்டது. அது கால சக்தியினால் ஏற்பட்டதொன்று. அதனால் அப்புகழின் மயக்கு மங்கியதும், அவருடைய குறைகளோ வெட்டவெளிச்சமாகிக் கடுமையான விமர்சனத்திற்கு ஆட்பட்டார். அக்காலத்தில் சுதந்திர வெறி ஓங்கியிருந்தது. அது அவர் குரலில் வெளிப்பாடு அடைந்தது. சமூக சம்பிரதாயங்கள் தனி மனிதனின் சுதந்திரத்தை ஒடுக்கின. அவன் தன் முனைப்பு கொண்டு கலக எழுச்சி செய்தான்.

வெகு காலமாக இருந்து வந்த பழக்க வழக்கங்கள், கொள்கைகள் ஆகியவற்றின் மீது அவநம்பிக்கை ஏற்பட்டது. பண்டை நிலை வசீகரித்தது. மனிதன் அமைதியிழந்தான். எதிர்காலத்தை நோக்கி இருளில் தடவினான். கீழ் நாடுகளும் அவற்றின் பண்பாடுகளும் அவனை ஈர்த்தன. தனிமையில் அவன் ஓரின்பம் கண்டான். ஒழுக்கத்திற்குக் கட்டுப்படாத ஓர் அதிமானுடனின் நிலையை அடைய நாடினான். அவன் மனவெழுச்சிக்கும் உணர்ச்சிகளுக்கும் வயமானான். சிற்றின்ப உணர்ச்சி, எடுத்ததற்கெல்லாம் குறைகூறும் ஒரு மனப்பான்மை, யதார்த்தவாதம் இவை வளர்ந்தன. மெல்ல மெல்ல மாண்டுவரும் பழைய உலகின் குழப்பநிலை இவை.

இவை பைரனைப்பற்றின. அவர் இவற்றைத் தம் கரடுமுரடான வடிவில் அமைத்துப் பாடினார். அவருடைய சமகாலத்தவர் இவற்றின் சொலிப்பால் மயங்கிப் போயினர். அவருடைய 'சைல்ட் ஹாரல்ட்', 'டான் சூவான்' ஆகிய கவிதைகள் சொல்லங்காரத்துடன்கூடிய படைப்புகள். ஆற்றல் வாய்ந்த அவற்றில் ஆழம் தான் இல்லை; கலையுருவும் காணோம். ஆனால் கவிதையில் வேறெவரும் கொண்டு வராத சில பொருள்களை இவர் கொண்டு வந்தார்.

அவற்றை அக்கால மனத்திற்கு எளிதில் கிரகிக்கக் கூடியவையாக இருந்தன. அவருடைய எழுத்தில் ஆற்றல் இருந்தது; உயிரின் வலிமை இருந்தது; மனோவெழுச்சி இருந்தது; தனித் தன்மை இருந்தது. அவை எரிமலைக் குழம்பு போல் வெடித்தெழுந்தன. அவருடைய அலங்கார நடை கனவேகத்துடன் சென்றது. அவருடைய வர்ணனைகள் உயிர்ச் சித்திரங்கள் தவறாத ஆற்றல் அவருடையது. இவை யாவும் அவருடைய கவிதைக்குப் போதுமானவையே. ஆனால் கவிதை அமரத்துவம் பெற இவை போதா.

அக்காலத்தில் பழைய மரபொழுங்குகளின் பிடியிலிருந்து திமிறிக்கொண்டு விடுதலையடைய முரட்டு முயற்சியொன்று முதலில் காணப்பட்டது. சூழ் நிலையில் கண்முன் தோன்றிய உலக உண்மையையும் தன்னையும் நேருக்கு நேராக உணரப் போராட்டமொன்றே நடந்தது. இவை மக்களின் மனத்தைக் குழப்பின. கவி பைரன் இவற்றையெல்லாம் வெளிப்படுத்தினான். ஆனால், பின்னர் ஏற்பட்ட படைப்பில் தெளிவில்லாத, ஆத்மீக அம்சம் ஒன்றும் காணப்பட்டது.

உலகிலும் இயற்கையிலும் மானிடன் தன் பெருமையை உணர்ந்தான். அவன் இயற்கையுடன் ஊடாடினான். தன் வலிமையாலேயே நிற்க வல்லவன் என்பதை அவன் உணர்ந்தான். தன்னைச் சூழ்ந்து தன்னை அடக்கினது போலத் தோன்றிய சக்திகளைப் போன்ற மகத்தான சக்திகள் தன் உள்ளத்தினுள் இருப்பதை அவன் உணர்ந்தான். அனைத்து உயிர்ச் சக்தி எழுச்சி பெற்று கலகம் செய்தது. அவனிடம் தன்னடக்கமில்லை. வானின்று வீழ்ந்த தேவன் சாத்தானைப் போலவே தன்னைக் கருதிக் கொண்டான்.

கடவுளிடமிருந்து தோன்றிய அவன் மீண்டும் கடவுளிடமே திரும்பச் செல்ல வேண்டும் என்ற எண்ணம் உதிக்கவில்லை. அவனுடைய அத்தியாத்ம உண்மையின் இருளடைந்த ஓர் அம்சமே அது. தன் கீழ்த்தர இயல்புகள் போட்ட தடைகளை அவன் உடைத்தெறியவில்லை. இந்த நிலையில் அவன் தன் படைப்பை விரிவுடன் வெளிப்படுத்த முடியவில்லை. அது முடிந்திருந்தால் அவன் பணிநிலையான பெருமை அடைந்திருக்கும்.

அவன் கவி தனக்குரிய சரியான வடிவை அமைத்துக் கொள்ளவில்லை. அவனிடம் மகத்தான படைப்புக்குரிய 'சீவன தேவதை, இருந்தது. ஆனால் அதற்குரிய சரியான வடிவையும், சரியான சிந்தனையையும் சரியான மொழியையும் அவன் அடையவில்லை. அவன் ஆரம்பித்த மொழியில் அறிவும் உணர்ச்சி மிகுந்த சொற்பொழிவுமே மேலோங்கியிருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த மொழியின் ஓர் புத்துருவே யன்றி அது வேறில்லை.

பைரனிடம் சக்திவாய்ந்த நடை இருந்தது. ஆனால் அதில் மென்மையோ அநுஞ்சுவையோ இல்லை; சூட்சுமம் இல்லை; பலவகைப்பட்ட பொருளுமில்லை. அற்ப விஷயங்களுக்குரிய எளிய மொழி அவரிடம் இருந்தது. ஆனால் மகத்தான மொழிக்குரிய நடை இல்லை. கலைத் தேர்ச்சி பெற்ற வார்ப்படம் தேவையென்பதை அவர் உணரவில்லை. சில சமயம் அவர் மொழி ஆற்றல் வாய்ந்த உண்மையையும் பெற்றிருந்தது. அதை மட்டும் அவர் நிலை நிறுத்த முடிந்திருந்தால் அது நல்லதொரு சாதனமாயிருக்கக் கூடும். ஆனால் அதற்குரிய பொறுமையையோ, கலைஞனுக்குரிய மனச்சாட்சியோ, கவியுண்மையைக் காண வேண்டுமென்றும் உணர்ச்சியோ இல்லை. இதனால் இரண்டாந்தரமான கவிதையையே அவர் இயற்றினார். அவரிடம் வெளிப்படுத்துவதற்குரிய மகத்தான விஷயங்கள் இருந்தும் அவர் அவற்றை சொல்லவேயில்லை. சில குறிப்புக்களை மட்டுமே அவர் அபூர்வமாக வெளிக்காட்டினார். அவற்றின் பொருளைப் பற்றிய உணர்வு அவரிடம் மங்கியிருந்தது.

## நான்காவது ஐந்தாண்டுத் திட்டம்

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அடிப்படை அம்சம், துரித தொழில் விஸ்தரிப்புடன் கூடிய தீவிர விவசாய வளர்ச்சியாகுமென்றும், அத்துடன் வாகனப் போக்குவரத்து, எரிபொருள், மின்சாரம், கல்வி ஆசியவற்றுக்கும் பொருத்தமான ஏற்பாடு செய்யப்படுமென்றும் திட்டக் கமிஷன் ராஜ்யங்களுக்கு அறிவித்திருக்கிறது.

தொழில் வளர்ச்சி அன்னியச் செலாவணி நெருக்கடியால் பாதிக்கப்படாத விதத்தில் அதன் பாணி அமைக்கப்பட வேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த லட்சியங்களை அடைவதற்கான வழிமுறைகளில், உள்நாட்டு சேமிப்பைக் கணிசமாக வளர்ப்பது. தொழில் திட்டங்களை மேலும் திறமையாக நிர்வகிப்பது, ஏற்றுமதிகளைக் கணிசமாகப் பெருக்குவது ஆகிய விஷயங்கள் நிச்சயமாக அடங்கியிருக்குமென்றும் திட்டக் கமிஷன் கூறியுள்ளது.

அபிவிருத்தித் திட்டங்களின் முக்கிய லட்சியங்கள் வருமாறு: 1. சோஷலிச பாணி சமுதாயத்தை அமைப்பது. 2. நாட்டின் பல்வேறு பகுதிகளை ஒரே மாதிரியாக அபிவிருத்தி செய்வது. 3. வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவது. 4. கூடிய விரைவில் சுயபலம் வாய்ந்த துரிதப் பொருளாதார வளர்ச்சியை தூண்டக் கூடிய விதத்தில் உற்பத்தி அளவை ஏற்படுத்துவது.

# ரயில் வண்டிகளில் உள்ள அபாய அறிவிப்புச் சங்கிலியை அகாரணமாக இழுப்பதனால் ஏற்படும் விபரீத விளைவுகள்

மக்களின் சௌகரியத்துக்காக ஏற்படுத்தப்பட்ட பல சாதனங்கள் சிற்சில சமயங்களில் துஷ்பிரயோகம் காரணமாக பெருந்தொல்லை விளைவிப்பனவாக மாறிவிடுகின்றன.

உதாரணமாக, ரயில் வண்டிகளில் பிரயாணிகளின் நலனுக்காகப் பொருத்தப்பட்டுள்ள அபாய அறிவிப்புச் சங்கிலிகளை எடுத்துக்கொள்வோம். சமீப காலமாக இந்த சாதனத்தைப் பலர் அடிக்கடி அவற்றை துஷ்பிரயோகப்படுத்துவதனால் அவற்றினால் பாதகமே ஏற்படுகிறது. அகாரணமாக இழுப்பவர்கள் அபராதத்துக்குள்ளாவார்கள் என்ற எச்சரிக்கை ஒன்றும் அங்கு மாட்டப்பட்டிருப்பதை எவரும் லட்சியம் செய்வதாக இல்லை. இத்தகைய செயல்களில் ஈடுபடுகிறவர்கள் பல முறைகளில் தப்பித்துக் கொண்டும் விடுகிறார்கள். கூடப் பிரயாணம் செய்பவர்கள் பாத்திரமறியாமல் காட்டும் அனுதாபம் காரணமாகவும், ஏனோதானோவென்ற அவர்களுடைய மனோபாவம் காரணமாகவும் அந்தக் குற்றவாளிகள் தப்பிவிடுகிறார்கள்.

இந்த சமூக விரோதப் போக்கு சில ரயில்வேக்களில் கவலைதரும் அளவுக்குப் பெருகியுள்ளது. பல தலைவர்கள் இப்போக்கை கண்டித்தும் பொது மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தும் பயன் ஏதும் இல்லை. இந்திய ரயில்வேக்களில் 1961-ம் ஆண்டிலும், 1962-ம் ஆண்டிலும் மொத்தம் 1,38,119 தடவை இந்த அபாய அறிவிப்புச் சங்கலிகள் அகாரணமாக இருக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் வடகிழக்குப் பிராந்திய ரயில்வேயில் மட்டிலும் இவ்வாறு 41,372 சம்பவங்களும், அதற்கடுத்தபடியாக வடகிழக்குப் பிராந்திய ரயில்வேயில் 32,456 சம்பவங்களும் ஏற்பட்டுள்ளன.

அபாய அறிவிப்புச் சங்கலிகள் ஏன் அகாரணமாக இழுக்கப்படுகின்றன. எவர் எவர் அத்தகைய செயலில் ஈடுபடுகின்றனர் என்பதைச் சற்றுக் கவனிப்போம். பெரும்பாலாக டிக்கெட்டின்றிப் பிரயாணம் செய்பவர்கள் தான் அத்தகைய செயலில் ஈடுபடுகின்றனர். வண்டியை நடு வழியில் நிறுத்தித் தப்பிச் செல்வது தான் அவர்களுடைய நடத்தைக்கு முக்கிய காரணமாகும்.

அடுத்தபடியாக ரயில் வண்டி சாதாரணமாக நிற்காத இடங்களில் இறங்க யத்தனிப்பவர்கள் இச்செயலில் ஈடுபடுகின்றனர். கொஞ்சம் தூரம் நடப்பதற்குச் சோம்பி சௌகரியமாக வழியிலேயே இறங்கிக் கொள்ள யத்தனிக்கும் அவர்கள், அதன் காரணமாக மற்ற நூற்றுக்கணக்கான பிரயாணிகளுக்கு ஏற்படக்கூடிய இடைஞ்சல்களையும், இன்னல்களையும் சிறிதும் கவனத்தில் கொள்ளுவதில்லை.

இதில் என்ன ஒரு ஆச்சரியமென்றால், இவ்வாறு பொறுப்பற்ற செய்கையில் ஈடுபடுபவர்களில் பெரும் பகுதியினர் படித்தவர்களாகும். இச்செய்கையினால் அவர்கள் பெறும் பலன் அற்பமேயாகும். ஆனால், அதனால் நாட்டுக்கு ஏற்படும் நஷ்டமும், மக்களுக்கு ஏற்படும் அல்லல்களும் கணக்கில் அடங்காது.

இந்தப் பொறுப்பற்ற நடத்தை, பலருக்குப் பல வகைகளில் துன்பமும், இடைஞ்சலையும் விளைவிக்கிறது. மாணவர்கள் உரிய காலத்தில் பரீட்சைகளுக்கு ஆஜராக முடிவதில்லை; வழக்கறிஞர்களும், வர்த்தகர்களும், வியாபாரிகளும், வாடிக்கைகளை இழக்கின்றனர். அபாய அறிவப்புச் சங்கிலி அகாரணமாக இருக்கப்படுவதினால், குடியொன்றும் முழுகிவிடுவதில்லையென்றும் பலர் கருத்துக் கொண்டிருக்கின்றனர். இதனால் ஏற்படும் பின் விளைவுகள் அவர்கள் கண்ணுக்குத் தென்படாததுதான் அதற்குக் காரணமாகும். சங்கிலித் தொடர் போன்று ஏற்படும் விளைவுகளும், பணநஷ்டமும் எவருக்கும் உடனடியாகப் புலப்படுவதில்லை. இத்தகைய நிகழ்ச்சிகள் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் ஏற்படுவதாக இருப்பதில்லை. உதாரணமாக, 1961-ம் ஆண்டிலும் பல்வேறு பிராந்திய ரயில்வேக்களில் மொத்தம் 190 சந்தர்ப்பங்களில் அபாய அறிவிப்புச் சங்கிலிகள் அகாரணமாக இருக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. அவ்வாறு சங்கிலி இழுக்கப்பட்டதில் ரயில் போக்குவரத்து மிகவும் குறைந்த அளவாக சம்பவம் ஒன்றுக்கு ஏழு நிமிஷம் தடைபட்டிருந்தால்கூட, இச்சம்பவங்களின் காரணமாக நாளொன்றுக்கு மொத்தம் 22 வண்டி - மணி நேரம் நஷ்டமாவதாக கணக்காகிறது.

இந்திய ரயில்வேக்கள் நாளொன்றுக்கு 9,000-க்கும் அதிகமான ரயில் வண்டிகளை போக்குவரத்தில் ஈடுபடுத்துகின்றன. கால அட்டவணைபடி ரயில் போக்குவரத்து நடைபெறுவிட்டால் ஏற்பாடுகள் அனைத்தும் குளறுபடியாகிவிடுவதுடன், பல வண்டி இணைப்புகளும் தவறவிடப்படும். இதனால் ஏற்படும் தொடர்விளைவுகள் கணக்கிலடங்காது. ஒரு வண்டியினால் ஏற்படும் தாமதம் பல வண்டிகளின் போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்துவிடும். அவற்றின் இணைப்புக்குக் காத்திருக்கும் பல வண்டிகள் புறப்படுவதிலும் தாமதமேற்படும். இந்த விபரீத விளைவு சிறுகச் சிறுகப் பெருகி இறுதியில் கட்டுக்கடங்காத நிலைமையில் கொண்டு போய் விடும். இதனால் பிரயாணிகள் பலர் வண்டிகளைத் தவறவிடுவதும் சகஜமாகி விடும்.

இவை எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமானது ஒன்று உள்ளது. தொழில் துறையினருக்குத் தேவைப்படும் அத்தியாவசிமான மூலப் பொருள்களையும், உப்பு முதல் அரிசி வரையிலான அன்றாட உபயோகப் பண்டங்களையும் எடுத்துச் செல்லும் குட்ஸ் வண்டிகள் நடு வழியில் அநாவசியமாக நிறுத்தப்பட வேண்டிய நிர்ப்பந்த நிலையேற்பட்டு, நாட்டின் பொருளாதார அமைப்புக்கே பெரும் நஷ்டத்தை ஏற்படுத்தும் அளவுக்கு அவை காரணமாகின்றன.

நாட்டில் தற்போதிருந்து வருகிற நெருக்கடி நிலையைக் கருத்தில் கொள்ளும் போது இப்பிரச்னை மீண்டும் கவலைக்கிடம் தருவதாக உள்ளது. இந்நாட்டில் ரயில்வேக்களே போக்குவரத்துக்கான பிரதானம் சாதனமாக விளங்குகிறது. போர் முனைக்குப் படைவீரர்களையும், அத்தியாவசியப் பொருள்களையும் எடுத்துச் செல்லும் பொறுப்புமிக்க பணியில் அவை ஈடுபட்டு வருகின்றன. 'அவற்றைத் துரிதமாகவும், திறமையோடும் எடுத்துச் சென்று சேர்ப்பிக்க வேண்டியிருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில், அபாய அறிவிப்புச் சங்கிலிகளை அகாரணமாக இருப்பவர்கள் அதற்குக் குந்தகம் விளைவிப்பதுடன், நாட்டின் எதிரிக்கு உதவுபவர்களாகவும் மாறுகிறார்கள் என்பதை எல்லோரும் உணர வேண்டும்.

★



## ஒன்றே குலம்

ஊனெடுத்த உயிர்கள் அனைத்தையும்
ஒன்று போல நினைக்கத் தெரிந்திடில்
நானெடுத்த பிறப்புச் சிறந்ததே:—
இல்லை யாயின் இடக்குத் தொடக்கிதே!

அன்பு கொஞ்சி, அலகு பிணைத்து, விண்
அத்தனைக்கும் கிளர்ச்சி தரஎழும்
இன்பச் சிட்டுக் குருவி இணையினைக்
கண்ட பின்புநற் காதல் உணர்கிறோம்!

பொங்கி எங்கும் பரந்த பிடர்மயிர்
பூரித்து ஓங்கப் பெருமித மாகிடும்
சிங்க ஏற்றின் திருத்தகு காட்சியில்
வீரத் தோற்றப் பொலிவை உணர்கிறோம்!

அன்று செய்த ஒருசிறு நன்றியை
ஆயுள் காறும் மனத்துள் பதித்திருந்து
என்று மேமக்கு இன்துணை யாய்எழும்
நாயின் அன்பினில் நன்றி உணர்கிறோம்!

வானம் பெய்த மழையை, (மலர்கனி
யாக ஏந்தி மரஞ்செடி போன்றவை)
தானஞ் செய்யும் தலைமைக் குணத்திலே
வண்மை என்பது இதுவென் றுணர்கிறோம்!

என்னை, என்னுடன் வாழும் பிறர்களை,
யாவும் இன்ப மயஞ்செயும்!— ஆதலால்
அன்னை, தந்தை, அரிய உறவினர்
என்று கொள்ளத் தகுவன அல்லவோ?

— சாலை இளந்திரையன்

# படைவீரர்களின் தவிப்பு

கடல் மட்டத்துக்கு மேலே பல ஆயிரம் அடிகள் உயரத்தில் ஒரு பாலைவனம்; பூமியோ கரடு முரடானது; சுற்றிலும் இருப்பவைகளோ சாம்பல் நிறக் கருங்கல் மலைகள்; அவ்வப்போது சுழன்றடிக்கும் காற்று, கண்களில் பொடி மண்ணைத் தூவிவிடும். பசுமையென்பதே இல்லாத வறண்ட நிலப்பரப்பு. பொறுமையைச் சோதிக்கக் கூடிய இத்தகைய சூழ்நிலையில் அமைந்திருப்பது தான் லடாக்.

லடாக்கில் காண முடியாத அரிய பொருள்களில் தண்ணீரும் ஒன்று. நமது ஜவான்களுக்கு எங்கே தேவைப்படுகிறதோ அந்த இடத்தில் தண்ணீர் கிடைக்காது.

எப்போது தேவைப்படுகிறதோ, அந்த நேரத்தில் கிடைக்காமல் ஏங்கித் தவிக்க வைக்கும்! ஜவான்கள் இருக்கும் இடத்திலிருந்து பல மைல்களுக்கப்பால், மலையூற்றுக்கள், பொங்கி எழுந்து கொண்டிருக்கும்; அல்லது, வெகு தூரம் தள்ளி சின்னஞ்சிறு அருவிகளாக விழுந்து கொண்டிருக்கும். யாருக்கும் பயன்படாமல் தண்ணீர் வீணாகிக் கொண்டிருக்கும்.

மோட்டார் வண்டிகளின் மூலமும் கோவேறு கழுதைகளின் மூலமும் தகரடப்பாக்களின் குடி தண்ணீர் இந்த முன்னணிப் பிரதேசங்களுக்குக் கொண்டுவரப்படுகிறது. மிகவும் அத்தியாவசியமான ஒரு பொருளாதலால், இந்தத் தண்ணீரை வீணாக்கக் கூடாது. எனவே, குளிப்பதற்கு தண்ணீரை உபயோகப்படுத்துவதென்பது சாத்தியமாகுமா? நன்றாகக் குளிக்கும் வாய்ப்பு நமது ஜவான்களுக்கு வாரத்துக்கொரு முறைதான் கிட்டும்.

ஞாயிற்றுக் கிழமைகளில், ஓய்வாக உள்ள ஜவான்கள் சிந்து நதிக் கரைக்கோ, அல்லது சிறு ஏரிகளையும் மலையருவிகளையும் தேடியோ, ஆவலுடன் குளிக்கச் செல்கிறார்கள். நன்றாக உடம்பைப் பிடித்து விட்டுக் கொண்டு ஆசை தீர அமிழ்ந்து குளிக்கிறார்கள். (இன்னும் ஒரு வாரம் வரை அந்த வாய்ப்புக்குக் காத்திருக்க வேண்டுமே) வட நாட்டு வீரர்கள் உடம்பில் கடுகெண்ணெய் தேய்த்துக் குளிக்கிறார்கள். தென்னகத்திலிருந்து சென்றிருப்பவர்கள் தேங்காயெண்ணெய் அல்லது ஆளிவிதை எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்கிறார்கள். அங்கேயே துணியையும் துவைத்துக் கொள்கிறார்கள்.

சில சமயங்களில் நீரின் தண்மை உடம்பைக் கத்தியால் வெட்டிப் பிளப்பது போல் இருக்கும். ஆனால் குளிப்பதிலுள்ள சுகம், இந்த உடல் சிரமத்தை மறக்கச் செய்து விடும்.

ஜவான்கள் தங்கள் இருப்பிடங்களுக்குத் திரும்பி வந்தவுடனேயே, அவர்கள் உடலில் புழுதி படிந்து விடும். ஆனால் இது அவர்களுக்குப் பழக்கமாகி விட்டது.

வருடத்தில் ஆறு மாதங்களில், பனிக்காலம் சீதோஷ்ண நிலை, பகலில் கூட, சைபர் டிகிரிக்கும் குறைவாக இருக்கிறது. தண்ணீர் உறைந்து விடுகிறது. ஆகவே, குடி தண்ணீருக்குக் கூட, பனிக்கட்டியை உருக்க வேண்டியிருக்கிறது. இந்தக் குளிர்ந்த நீரைக் கொண்டு முகத்தைக் கழுவிக் கொள்வதுடன், ஜவான்கள் திருப்தியடைய வேண்டியது தான்.

★

# பொருளாதாரத்தில் பருத்தி

இந்தியாவில் 20 லட்சம் ஏக்கருக்கு மேற்பட்ட நிலப்பரப்பில் பருத்தி பயிரிடப்பட்டு வருகிறது. இது இங்குள்ள மொத்த விளை நிலப்பரப்பில் ஏறத்தாழ 6 சதவிகிதமாகும். ஒவ்வொரு ஆண்டும் இந்தியாவில் சுமார் 55 லட்சம் கட்டுப் பருத்தி பல்வேறு ரகத்திலும் விளைகிறது. இதனை ரூபாய் மதிப்பில் கூறுவதானால் சுமார் 250-300 கோடி ரூபாய் மதிப்புள்ள பருத்தி இந்தியாவில் ஆண்டுதோறும் உற்பத்தி செய்யப்படுகிறது என்னலாம்.

பருத்தி விவசாயத்தின் மூலம் பல லட்சம் விவசாயிகள் பிழைக்கிறார்கள். அத்துடன் 8 லட்சத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்களின் பிழைப்புக்கு ஆதாரமாயும் ஆண்டுதோறும் 125 கோடி ரூபாய் சம்பளப் பட்டுவாடா செய்து வருவதாயுமுள்ள பஞ்சாலைத் தொழிலும் இந்தப் பருத்தி விளைவை ஆதாரமாக நம்பியே நிலைத்து நிற்கிறது. ஆண்டொன்றில் 600 கோடி ரூபாய் பெறுமான ஜவுளியை உற்பத்தி செய்கின்ற கைத்தறித் தொழிலிலும், விசைத்தறித் தொழிலிலும் ஈடுபட்டிருக்கும் சுமார் 25 லட்சம் தொழிலாளர்களின் பிழைப்புக்கும் இந்தியப் பருத்தி ஆதாரமாக இருக்கிறது. கச்சாப் பருத்தியும் ஜவுளி உற்பத்திகளும் இந்தியாவின் முக்கிய ஏற்றுமதிப் பொருள்களாக விளங்குவதால் நாட்டுக்குத் தேவையான வெளிநாட்டுச் செலாவணியையும் அவை ஈட்டித் தருகின்றன. இந்த ஏற்றுமதிகள் மூலம் இந்தியாவுக்கு ஆண்டுதோறும் சுமார் 72 கோடி ரூபாய்கள் கிடைக்கின்றன.

பருத்தியில் பஞ்சு மட்டுமின்றி அதன் கொட்டையும் உபயோகமானதாகும். பால் தரும் கால்நடைகளுக்குப் பருத்திக் கொட்டை மிகுந்த போஷாக்குள்ள உணவாக விளங்குகிறது. சமீப காலமாக பருத்திக் கொட்டையிலிருந்து எண்ணெய் தயாரிப்பது அதிகமாகியிருக்கிறது. இந்த எண்ணெய் உணவுக்கும் மற்றும் ஒரு சில தொழிற்சாலைகளுக்கும் பயன் படுவதால் பருத்தி விதை எண்ணெய் தயாரிப்பு ஆலைகள் இப்போது நாட்டில் பெருகி வருகின்றன. தொழிற்சாலைகளில் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வருகிற 'லின்டர்' தயாரிப்புக்கும் பருத்தி விதை உபயோகமாகிறது. மேற்கூறியவற்றால் இந்தியப் பொருளாதாரத்தில் பருத்திக்குள்ள அதி முக்கியத்துவம் சொல்லாமலே விளங்கும்.

உலகத்திலேயே பருத்தி விளையும் நிலப்பரப்பு இந்தியாவில்தான் அதிகம். ஆனால் ஏக்கருக்குக்கிடைக்கும் பருத்தியின் அளவை மதிப்பிட்டால் உலகில் எல்லா நாடுகளையும்விட இந்தியாவில்தான் மிகவும் குறைவாகும். இது ஒன்றுக்கொன்று எவ்வளவு முரணாக இருக்கிறது? இந்த நிலையை மாற்றி இந்தியாவில் பருத்தி உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டுமானால் மகசூல், தரம் என்ற இரண்டு விஷயங்களில் உடனடியான கருத்துச் செலுத்த வேண்டும். இந்தியாவில் பருத்தி விளையும் மொத்த நிலப்பரப்பில் 86 சதவிகிதம் மானாவாரிப் பயிராகவே இருக்கிறது. பருவ மழை எப்போது பெய்யுமென்று எந்த நாளும் நிதானிக்க முடியாதிருக்கும் நிலையில் இந்த மானாவாரிப் பயிரில் மகசூலைப் பெருக்குவது எப்படி? ஈரப்பதத்தின் மாற்றங்களுக்கு ஏற்ப வளர்வது பருத்திச் செடியின் தன்மையாகும். எனவே தொடர்ந்து கொஞ்ச நாள் மழையில்லாது போனாலும் அல்லது காலந்தவறி மழை பெய்தாலும் பருத்திப் பயிர் வெகுவாகப் பாதிக்கப்படும்.

இந்தியாவில் பருத்தி பயிரிடும் விவசாயிகள் சிறந்த விவசாய நுணுக்கங்களை அதிகமாகக் கையாளுவதில்லை. பருத்தி மகசூல் குறைவுக்கு இதுவும் ஒரு காரணமாகும். பருத்தியின் தரத்தைப் பொறுத்தவரை இந்தியா இன்னும் பின்னணியில் இருக்கிறது. மெல்லியதும் மிக நேர்த்தியானதுமான ஆடைகள் தயாரிப்பதற்கு ஏற்ற பருத்தி ரகங்களில் 10 முதல் 12 சதவிகிதத் தேவையை வெளிநாடுகளிலிருந்தே சாதாரண காலங்களில் இறக்குமதி செய்யவேண்டியிருக்கிறது. பருவநிலைக் கோளாறால் விளைவு குறையும் காலங்களில் இன்னும் அதிகமாக வெளிநாடுகளின் கையை நாம் எதிர்பார்க்க வேண்டிய நிலையிலிருக்கிறோம்.

பருத்தி வேளாண்மையில் அபிவிருத்திகள் செய்வதற்காகவும், உற்பத்தியையும் விற்பனையையும் பெருக்குவதற்காகவும், இந்திய அரசாங்கத்தால் 1921-ம் ஆண்டு இந்தியப் பருத்திக் குழு ஸ்தாபிதம் செய்யப்பட்டது. இந்தக் குழு தோன்றிய நாள் முதல் பருத்தி வேளாண்மை, கொட்டை நீக்கும் தொழில், பருத்தி வாணிபம் ஆகிய அனைத்திலும் முன்னேற்றம் காண்பதற்காகத் தன்னாலியன்ற அனைத்தையும் செய்து வருகிறது. அது பல தற்காலிகத் திட்டங்களை ராஜ்ய விவசாய இலாகாவுடனும், பல்கலைக் கழகங்களுடனும் மற்றும் விவசாயத் தொடர்புடைய இதர ஸ்தாபனங்களுடனும் கூட்டாகச் சேர்ந்து நடத்தி வருகிறது. இத்திட்டங்களின் மூலம் பருத்தி ரகங்களின் தரம் உயருவதற்கும் மகசூல் கூடுவதற்கும் எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இதுவரை 75க்கு மேற்பட்ட திருந்திய ரக வித்துக்கள் இத்திட்டங்களின் மூலம் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் 34 ரகங்கள் இப்போது நாடெங்கும் பயிராக்கப்பட்டு வருகிறது.

1924-ம் ஆம் ஆண்டில் இந்தக் குழுவினர் தொழில் நுணுக்க ஆய்வுக் கூடமொன்றை நிறுவினார்கள். இந்த ஆய்வுக் கூடத்தில் வித்துப் பெருக்க வேலைகளை வெவ்வேறு ராஜ்யங்களிலும் அபிவிருத்தி செய்வதற்குத் தூண்டுதல் அளிக்கப்பட்டது. பருத்தியைப் பற்றிய நுணுக்கங்களில் பலரும் கருத்துச் செலுத்துவதற்கும் உதவிகள் செய்யப்பட்டன.

இந்தியா — பாகிஸ்தான் பிரிவினைக்கு முன்பு மொத்தம் 423 ஜவுளி ஆலைகள் இந்தியாவில் இருந்தன. அவற்றில் பெரும் பகுதி இன்று பிரிவினையாகியுள்ள இந்தியப் பகுதியிலேயே அமைக்கப்பட்டிருந்தன. 1947ல் பிரிவினை ஏற்பட்டபோது 408 ஆலைகள் இந்தியாவைச் சேர்ந்தன. ஆனால் பருத்தி விளையும் இடங்களெல்லாம் பாகிஸ்தானிலேயே மிகுதியாக இருந்தன. இதனால் இந்தியப் பகுதியில் இருந்த நூல் ஆலைகளுக்குத் திடீரென்று பஞ்சு கிடைக்காத ஒரு நெருக்கடி வந்தது. இந்த நெருக்கடியை அதிகப்படுத்த வந்தது போல 1948—49ல் இந்தியாவில் பருத்தி மகசூலும் குறைந்து போயிற்று. இந்த இரண்டு காரணங்களாலும் ஏற்பட்ட பருத்திப் பற்றுக்குறை நெருக்கடியை எப்படியாவது சமாளித்தாக வேண்டிய பிரச்னை அப்போது ஏற்பட்டது.

இந்த நெருக்கடி நிலையைத் தீர்த்து பருத்தியில் சுய தேவைப் பூர்த்தி செய்து கொள்வது எப்படி என்பது பற்றி இந்திய பருத்திக் குழு 1949ல் நுணுக்கமாக ஆராய்ந்தது. இந்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களின் ஒத்துழைப்பின் பேரில் பருத்தி அபிவிருத்தித் திட்டங்களை பருத்தி விளைவிக்கும் ராஜ்யங்களில் கொண்டு வர தீர்மானித்தது. பருத்தி விளையும் நிலப் பரப்பை அதிகப்படுத்துதல், தீவிர விவசாய முறைகளைக் கையாளுதல் முதலியவைகளை நோக்கமாகக் கொண்ட இந்த அபிவிருத்தித் திட்டங்கள் 1950—51 நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டன. பருத்தி பயிரிடுவோருக்கு அபிவிருத்தி வேலைகளுக்காக அநேக உதவிகள் செய்யப்பட்டன. முதலாவது ஐந்தாண்டுத் திட்ட காலங்களிலும் இத்திட்டங்கள் தொடர்ந்து அமுலாக்கப்பட்டன.

இந்திய பருத்திக் குழுவின் திட்டங்களும் அரசாங்கத்தின் முயற்சியும் வீணாகி விடவில்லை. சுதந்திரத்திற்குப் பின் பருத்தி விளைவும் திடீரென்று பெருகத் தொடங்கியது. 1947-48ல் சுமார் 1 கோடி ஏக்கராக இருந்த பருத்தி விளை நிலப் பரப்பு; பத்து ஆண்டுகளில் இரண்டு மடங்காகப் பெருகி 1957 58ல் 2 கோடி ஏக்கராயிற்று. அதற்கு ஏற்றாற்போல் 1947-48ல் 21·38 லட்சம் கட்டுக்களாக இருந்த பருத்தி உற்பத்தி 1960-61ல் 53·9 லட்சம் கட்டுக்களாக உயர்ந்தது. அதனால் முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் குறிக்கோளாகக் கொள்ளப்பட்ட 42 லட்சம் கட்டு பருத்தி உற்பத்தி அளவானது திட்டம் முடிவடைவதற்கு ஓராண்டு முன்பாகவே நிறைவேறி விட்டது. ஆனால் அடுத்தடுத்து வந்த பருவங்களில் பற்பல பாதகமான சூழ்நிலைகள் காரணமாக பருத்தி உற்பத்தியில் மந்த நிலை ஏற்படத் தொடங்கிற்று. 1957 58 வரை சூழ்நிலை மோசம் அடைந்திருந்ததால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு முதலில் குறிப்பிடப்பட்ட 65 லட்சம் கட்டு உற்பத்திக் குறிக்கோளை 54 லட்சம் கட்டுக்களாகக் குறைத்துக்கொள்ள நேர்ந்தது. 1960-61ல் இந்தக் குறிக்கோள் நிறைவேறியது.

1961-62ல் பருத்தி உற்பத்தியில் சிறிது வீழ்ச்சி

[8ம் பக்கம் பார்க்க]

### அருள் வாக்கு

இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாயிருப்பவர்களை உலகத்தவர்களின் எதிர்ப்பும் பகையும் பாதிக்கமாட்டா.

தான் செய்த குற்றத்தை முன்னிட்டு வருந்துபவனை உலகம் பழிப்பதில்லை; அதற்கு மாறாக அனுதாபம் காட்டுகிறது.

முற்றிலும் இறைவனையே சரணடைந்திருப்பவர்களுக்கு எப்பொழுது உய்வு உண்டாகும் என்னும் எண்ணம் எழுவதில்லை.










# பொருளாதாரத்தில் பருத்தி

[ 2-ம் பக்கத் தொடர்ச்சி ]

ஏற்பட்டதால் இந்தியப் பருத்தி உற்பத்திக் குழு அவ்வீழ்ச்சியைத் தொடராமல் தடுக்க அதிக கவனம் எடுத்துக் கொண்டது. விளைவைப் பெருக்குவதற்காகப் பருத்தி பயிரிடுவோருக்குப் பற்பல உதவிகள் செய்யப்பட்டன. இதன் பயனாக 1962-63ல் இந்தியாவில் பருத்தி உற்பத்தி ஏறத்தாழ 59·7 லட்சம் கட்டுக்களை எட்டிவிட்டது. இந்திய சுதந்திரத்திற்குப் பிறகுள்ள ஆண்டுகளில் இந்த ஆண்டைப் போல் பருத்தி உற்பத்தி இவ்வளவு அதிகமாக எப்போதுமே இருந்ததில்லை.

இந்தியாவில் சுதந்திரத்திற்குத் பிறகு பருத்தி மகசூல் பெருகிய போதிலும் அந்தப் பெருக்கத்தை உணர முடியாத அளவு பஞ்சாலைகளில் பஞ்சுத் தேவையும் பெருகிவிட்டது. 1947-48ல் 408 ஆக இருந்த இந்தியப் பஞ்சாலைகளின் எண்ணிக்கை 1961-62ல் 526 ஆக உயர்ந்தது. ஆதலால் இந்தியாவிலுள்ள ஆலைகள் முழுவதற்கும் தேவைப்படும் பஞ்சுக்கட்டுகளின் அளவு பத்தாண்டுகளுக்குள் 35 சதவிகிதம் உயர்ந்தது. நாளுக்கு நாள் உள்நாட்டுப் பருத்திப் பஞ்சு உபயோகம் ஆலைகளில் அதிகரித்துக் கொண்டே வந்ததால் அத்தேவையை ஈடுகட்டும் அளவுக்குப் பருத்தி உற்பத்திப் பெருக்கம் போதவில்லை.

பருத்தி இறக்குமதியைக் குறைக்கும் முயற்சியில் ஒரு முக்கிய விஷயம் கவனிக்க வேண்டியிருந்தது. இந்தியாவில் இழை நீளமில்லாத பருத்தியே முன்பு பல இடங்களிலும் பயிராக்கப்பட்டு வந்தது. அந்த இடங்களில் மெல்லிய ஆடை நெய்வதற்கேற்ற நீண்ட இழைப் பருத்தி ரகங்களைப் பயிரிட இருக்கும் வாய்ப்புக்களை ஆராயப் பருத்தி உற்பத்தி பற்றிய ஆராய்ச்சி மிகுதியாகத் தேவைப்பட்டது. இந்திய மண்ணுக்கு ஏற்றதும் நேர்த்தியான பஞ்சு தரக்கூடியதுமான பல பருத்தி ரகங்கள் உண்டாக்கப்பட்டன. வெளிநாட்டு இறக்குமதியைக் குறைப்பதற்கு ஏற்றபடி, உள்நாட்டில் முன்பு குறுகிய இழைப் பருத்தி பயிரிடப்பட்ட இடங்களிலெல்லாம் நீண்ட இழைப் பருத்தி விதைக்கப்பட்டது. சமீப ஆண்டுகளாக நீண்ட இழைப்பருத்தி உற்பத்தி பல இடங்களில் வெற்றியாக நடைபெறுவதால் இறக்குமதியைக் கணிசமாகக் குறைக்க முடிந்திருக்கிறது. 1950-52ஆம் ஆண்டில் 100·8 கோடி ரூபாய்களுக்கு வெளிநாட்டுப் பருத்தி இறக்குமதி ஆகியிருக்கிறது. 1958-59ல் 28.3 கோடி ரூபாய்க்கே இறக்குமதி செய்யப்பட்டது. இதிலிருந்து கடந்த ஆண்டுகளில் இந்தியப் பருத்தியில் உற்பத்தியின் தரம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்று அறிந்துகொள்ளலாம்.

இவ்வளவு தூரம் பருத்தி உற்பத்தியில் இந்தியா முன்னேறியிருந்த போதும் வெளிநாடுகளை ஒப்பிட்டு நோக்கும்போது ஏக்கருக்குக் கிடைக்கும் பருத்தி மகசூல் இன்றும் குறைவாகவே இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே பருத்தி மகசூலைப் பெருக்குவதில் எதிர் காலத்தில் நாம் இன்னும் அதிக கருத்துச் செலுத்த வேண்டியிருக்கிறது. நல்ல வித்துக்களை உரிய காலத்தில் விதைப்பதற்கும் போதிய அளவு உரமிட்டுப் பயிர்ப் பாதுகாப்பு முறைகளை ஒழுங்காகக் கடைப் பிடிப்பதற்கும் விவசாயிகளுக்குத் தூண்டுதல் அளிக்க வேண்டும். இதற்கு வேண்டிய பல திட்டங்களையும் இந்தியப் பருத்திக் குழு பல ராஜ்யங்களில் நடத்தி வருகிறது.

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவுக்குள் ஆண்டொன்றுக்கு 70 லட்சம் கட்டுக்கள் என்ற குறிக்கோளைப் பருத்தி உற்பத்தியில் நிறைவேற்ற வேண்டுமென்று திட்டமிடப்பட்டிருக்கிறது. 1962-63 58 லட்சம் கட்டுகளே உற்பத்தியாகி உள்ளன. நாம் நமது குறியீட்டு எல்லையை வெற்றியுடன் நிறைவேற்ற வேண்டுமென்ருல் இன்னும் 12 லட்சம் கட்டுக்களை உற்பத்தி செய்தாக வேண்டும். விளை நிலப்பரப்பை இனி அதிகப்படுத்த முடியாதாகையால் உள்ள நிலத்தில் மகசூலை அதிகப்படுத்துவதற்கே முயற்சிகளைச் செய்யவேண்டும். இதற்காகத் தீவிர விவசாயத் திட்டங்கள் பலவற்றை நடத்துவதில் அரசு அதிகக் கருத்துச் செலுத்தி வருகிறது. நாடு முழுவதிலும் வெவ்வேறு குறிப்பிட்ட பிராந்தியங்களைத் தேர்ந்தெடுத்து இத்திட்டம் நடத்தப்பட்டு வருகிறது. பருத்தி விளைவை அதிகப்படுத்துவதற்கு வேண்டிய சகல உதவிகளும் இத்திட்டங்கள் மூலம் விவசாயிகளுக்குச் செய்யப்படுகின்றன. இம் முயற்சிகள் காரணமாகப் பருத்தி உற்பத்தியில் நாம் நமது திட்டக் குறிக்கோளை அடைவது உறுதி. *

## கடலிலே காவல்

சென்ற ஆண்டு அக்டோபர் மாதம் 20-ஆம் தேதியன்று இந்தியக் கப்பற் படையைச் சேர்ந்த கப்பல்கள் போர்க்கோலம் தரித்து நின்றது பலருக்குத் தெரிந்திருக்காது.

சீனப் படையெடுப்பைத் தொடர்ந்து, இந்தியக் கடற் படையின் தலைமைக் காரியாலயம், கப்பல்களை எச்சரிக்கையுடன் இருக்கும்படி பணித்து, அனுப்பிய ஒரு செய்தி தான் கப்பல்களின் நடவடிக்கைகளையும், கரையோர ஸ்தாபனங்களின் நடவடிக்கைகளையும் அடியோடு மாற்றியமைத்தது.

கப்பல்கள் உஷாராயின. கரையோரப் பிரதேசங்கள் ஜரூராக நடவடிக்கைகளில் ஈடுபட்டன. பீரங்கிகளும், நீர் மூழ்கிக் கப்பல்களும் தயார் நிலையில் நின்றன. ராடார்கள் ஓய்வின்றிப் பணியாற்றத் தொடங்கின. கப்பல்கள் தாங்கள் சேகரித்த விஷயங்களை வகைப்படுத்தி, கப்பற்படைத் தலைமைக் காரியாலயத்துக்கு அனுப்பத் தொடங்கின. இரவிலும் பகலிலும் மாலுமிகள் கப்பல்களிலிருந்து செய்திகளை அனுப்பி வைத்தும், வானத்தையும் கடலையும் ஊடுருவிப் பார்க்கவும் முற்பட்டனர்.

இரவு நேரங்களில் கப்பல்களில் விளக்குகள் அணைக்கப்பட்டன. இருளோடு இருளாக ஊர்ந்து சென்ற கப்பல்கள், கண்காணிப்பு நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபட்டு வந்துள்ளனர்.

இந்தியாவின் 300 மைல் நீளக் கரையோரப் பகுதியையும், துறைமுகங்களையும், கடந்தளங்களையும், கப்பல் மார்க்கங்களையும், எதிரியின் தாக்குதலிலிருந்து காப்பதற்காகவே கடற்படையினர் அந்தப் பணிகளை மேற்கொண்டனர்.

அன்றைய தினத்திலிருந்து, அதாவது 1962-ஆம் வருடம் அக்டோபர் 20 ஆம் தேதியிலிருந்து, இந்தியக் கடற்படையின் கப்பல்கள் இந்தியாவின் கடலோரங்களிலும், தீவுகளையும் சுற்றியும் ரோந்து சுற்றி வருகின்றன.

கடற்படை நிகழ்த்தும் இந்த 'மௌனப்பணி' ஓய்வு ஒழிச்சலின்றி நடைபெற்று வருகிறது. நமது கண் பார்வைக்குப் புலனாகாத தொலை தூரத்தில், கடற் படையினர் நிகழ்த்தும் இந்தக் கண்காணிப்புக்கு, வானமும் கடலுமே ஊமை சாட்சிகளாக இருக்கின்றன.

✤

## கிராமத் தொண்டர் படை

தேகதிடம் வாய்ந்த முதியோர்கள் குறைந்தது 25 சதவிகிதம் பேராவது கிராமத் தொண்டர் படையில் சேர்ந்துள்ள கிராமப் பஞ்சாயத்துகளுக்குச் சர்க்கார் மானிய உதவி வழங்க வேண்டும் என்று, கிராமத் தொண்டர் படைத் திட்டம், பாதுகாப்பு உழைப்பு பாங்கித் திட்டம் ஆகியவற்றை ஒருமுகப்படுத்துவது பற்றி அறிக்கை சமர்ப்பிப்பதற்காக சமுதாய நல அபிவிருத்தி— கூட்டுறவு மந்திராலயம் அமைத்துள்ள கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது.

கிராமத் தொண்டர்படை வேலைத் திட்டங்களுக்கு வருடமொன்றுக்குக் குறைந்த பட்சம் 12 நாட்கள் இலவச உழைப்பை அளிக்க முன் வருகிறவர்கள் மட்டுமே கிராமத் தொண்டர் படையில் அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்று மந்திராலயம் முடிவு செய்துள்ளதைக் கமிட்டி ஆமோதித்திருக்கிறது.

தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள், சாதனங்கள் முதலியவற்றிற்கு சர்க்காரிடமிருந்து உதவி கிடைக்கிறவையும், முழுதுமோ அல்லது ஓரளவோ இஷ்டபூர்வ உடலுழைப்பை அடிப்படையாகக் கொண்டவையுமான வேலைத் திட்டங்களில் பஞ்சாயத்துக்கள் விசேஷ கவனம் செலுத்த வேண்டும் என்றும் சிபாரிசு செய்யப்பட்டுள்ளது.

கிராம வேலைத் திட்டங்களை நிறைவேற்றுவதில் பஞ்சாயத்துக்கள் அந்தந்த கிராமத்திலுள்ள ஆள்பலம் முழுவதையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று கமிட்டி வற்புறுத்தி இருக்கிறது; அவசியமானல் இதற்காக ராஜ்ய சர்க்கார்கள் சட்டங்களைத் திருத்தியமைக்க வேண்டும் என்றும் கமிட்டி யோசனை கூறியிருக்கிறது.

குளங்களில் தூர் எடுத்தல், சிறு பாசனத் திட்டங்களை அமைத்தல், ஜலதாரை வசதிகள், மண்வளப் பாதுகாப்பு, மரம் நடுதல், பசுந்தாள் உரம், குப்பை உரம் தயாரித்தல் முதலியவை போன்ற விவசாய உற்பத்தித் திட்டங்களுக்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும் என்று கமிட்டி சுட்டிக் காட்டியிருக்கிறது.

மூந்தியக் கூட்டுறவு பாங்கிகளில் டெபாஸிட்தாரர்களுக்கு ஓவர்டிராப் கடன் வசதிகளை அளிப்பதற்கு இப்பொழுது ஏற்பாடாகியுள்ளது. டெபாசிட் தொகைகளின் அளவுகளைப்பெருக்குவதற்கும் பாங்கிகளின் நிதி ஆதாரங்களை வலுப்படுத்தவும் இவ் வசதி பயன்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

தற்காலிக் கடன், கூட்டுறவுக் கடன் கமிட்டியின் சிபாரிசின் பேரில், இந்த ஓவர் டிராப்ட் கடன் வசதி நிரந்தர வருவாயுள்ள நீண்ட கால டெபாசிட்தாரர்களுக்கு மட்டுமே வழங்கப் பெறும். அவசரத் தேவைகளைச் சமாளிக்கவே இவ் வசதி அளிக்கப்படுகிறது. இந்த ஓவர்டிராப்ட் கடன் தொகையானது ஒரு குறிப்பிட்ட வரம்புக்குள்ள பாங்கிகளின் டெபாசிட்டுகளில் ஒரு குறிப்பிட்ட விகிதாசாரத்துக்கு மேற்படாமலும் இருக்க வேண்டும். கட்டங் கட்டமாக நிறைவேற்றப்படும் ஒரு திட்டத்தின்படி, தற்காலிக் கடன் கடன்களை கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாக வழங்குவதென்று இந்திய சர்க்கார் முடிவு செய்திருக்கின்றனர். மூன்று முதல் ஐந்து வருட காலத்துக்குள் தற்காலிக் கடன்களைக் கையாளும் வேலை முழுவதையும் ராஜ்யங்களிலுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் மேற்கொண்டு விடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. விளை பொருள் உற்பத்தி, நில அபிவிருத்தி, ஆகிய காரியங்களுக்காக விவசாயிகளுக்குக் கடன் உதவிகள் வழங்கும் மாமூல் ஏஜென்ஸியாகக் கூட்டுறவு சங்கங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிடும். ஆயினும், நிதிப் பொறுப்பு முதலிய கஷ்டங்கள் உள்ள இடங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் நிதி உதவி அளிப்பது சாத்தியப்படாது. எனவே அத்தகைய சந்தர்ப்பங்களில் சர்க்காரே தற்காலிக் கடன்களை நேரடியாக வழங்குவார்கள். •



Edited & Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji Newsprinters, 24, A-Theradi Bazaar, Tiruchy-2.
Annual Subscription Including 4 Special Numbers: Individuals Rs. 5 Institutions Rs. 10. Single copy six nP. ( Madras office: 12/2, Nallathambi Mudali St., Triplicane, Madras-5.)